உ




# நகரத்தார்

திங்கள் இதழ்

61, D, உசுமான்சாலை – சென்னை-17

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு

பரிதாபி - வைகாசி மே - 1972

ஆசிரியர் புலவர் நாகசண்முகம்

பரிந்துரையாளர் எஸ். பிஎல். பழநியப்பா, பி.ஏ., பி.எல்.

குறிப்பு - மூன்று பேரேடு - ஐந்து


## கவியரசர் வாழ்க!

நான்முகன் உலகத்து உயிர்களின் விதிகளையெல்லாம் நிர்ணயிக்கின்றான்.

அதுபோலத்தான் நாட்டின் விதியையும் அந்நாட்டில் உள்ள பல மரபுகளின் விதிகளையும் சில பிர்மாக்கள் நிர்ணயிக்கிறார்கள்.

நிர்ணயிருப்பதற்கு இதுபோன்ற பிர்மாக்கள் வழி நடத்திச் செல்பவர்கள் இல்லை என்றால்.

அந்தநாடு — அல்லது மரபு இரங்கத்தக்க நிலையையே அடையும்.

நம் சமூகம் செய்த மிகச் சிறந்த புண்ணியங்களில் ஒன்று கவியரசர் கண்ணதாசன் அவர்கள் நம் மரபில் பிறந்தது.

எங்கோ நிலைப் பெற்றிருக்கின்ற கலன்கரை விளக்கம் எங்கெங்கோ செல்லும் கப்பல்களுக்கு வழி காட்டுகிறது.

அதுபோல நம்மரபில் பிறந்த கவியரசர் எல்லா மரபினரும், கடல் கடந்து வாழ்பவர்களும் போற்றிப் புகழத்தக்க பெருங்கவிஞராக விளங்குகின்றார்கள்.

அத்தகைய பெருமகனாரின் எழுத்துப் பணி வெள்ளி விழாவை ஒட்டி அவர் சிறப்பு மலராக இதனை வெளியிடுவதில் பெருமை கொள்கிறோம். நம் சமூகத்தின் விதியை நிர்ணயிப்பவர்களில் ஒருவராகக் கவியரசர் மாற வேண்டும்; இளைஞர் சமுதாயம் அதை எதிர்பார்க்கிறது என்பதைக் கூறி அவர்கள் வாழ்வாங்கு வாழ்கவென வாழ்த்துகிறோம்.

கவிதைப் பணிக்கு வெள்ளிவிழாக் காணும் கவியரசரின் கருத்துக்களை நம் நேயர்களுக்குத் தெரிவிக்கும் வகையில் அவர்களிடம் இருபது கேள்விகள் கேட்டோம்.

கேள்விகளையும், அவற்றிற்குரிய கவியரசரின் பதில்களையும் மிகுந்த மகிழ்ச்சியுடன் தருகின்றோம்.

ஆசிரியர்.

1. நமது சமூகம் பற்றிய தங்கள் கருத்து யாது ?

மிகவும் பழமையான நிலையிலிருந்து மாறிக் கொண்டிருக்கிற சமூகம் – இன்னும் மாற வேண்டிய சமூகம் – மிகக்குறைந்த தொகையினர் உள்ள சமூகங்களில் இதுவும் ஒன்று. ஆயினும் மிகுந்த பொருளாதார வசதிகள் இருக்கின்ற சமூகம் ஆதலால் இந்தச் சமூகத்திற்கு ஒரு முக்கியத்துவம் இருக்கிறது. இந்தச் சமூகத்தில் கல்வித் துறையிலே இப்பொழுது முன்னேறி வருவதுபோல் சமுதாயப் பழக்க வழக்கங்களிலும் பிற சமூகங்களோடு உறவாடுவதிலும் இது இன்னும் முன்னேற வேண்டும்.

2. நமது சமூகம் முன்னேற – அதில் உள்ள குறைபாடுகள் நீங்கப் பெரியவர்கள், இளைஞர்கள், பெண்கள் இவர்களுக்கு நீங்கள் கூறும் கருத்துக்கள் யாவை ?

பொதுவாழ்க்கையில் இந்தச் சமூகத்திலே உள்ள இளைஞர்கள் ஈடுபாடுகொள்ள வேண்டும். பொது வாழ்க்கைத்துறையிலே ஈடுபாடு இல்லை என்றால் எந்த நேரத்திலேயும் - அரசியல் மூலமாகவே பயனடைய முடியாது. பிற சமூகங்களைப் போல் நம்முடைய சமூகம் பயனடைய முடியாது. இளைஞர்கள் தற்காலக் கல்வி முறையை மட்டும் கருதாமல் அதற்கு அப்பாற்பட்ட குறைந்த கல்வியோடு நல்ல தொழில் நடத்தக் கூடிய துறைகளையும் நாடவேண்டும்.

பெரியவர்களுக்குச் சொல்ல வேண்டியது அதிகமில்லை. அவர்கள் இதுவரையிலே இருந்து வந்த சில நிலைகளை மாற்றி அமைத்துக் கொண்டு நம்முடைய சமூகத்தின் மொத்த நலனுக்காகவும் பாடுபட வேண்டும்.

பெண்கள் இப்போது நன்கு படித்து முன்னேறி வருகின்றார்கள். அவர்களுக்கு இன்னும் வாய்ப்புக்கள் தரவேண்டும். இன்னும் அதிகப் படிப்புக்கான வசதிகள் தரவேண்டும். பெண்ணுடைய படிப்பு என்பது நல்ல மாப்பிள்ளை கிடைப்பதற்காக மட்டுமே என்கின்ற நிலைமை இல்லாமல், அந்தப் படிப்பின் மூலமாகப் பெண்கள் சம்பாதிக்க வேண்டும் என்கின்ற கருத்தோடு அமையவேண்டும்.

ஆகப் பெரியவர்களாயினும் இளைஞர்களாயினும் பெண்களாயினும் சமுதாய வாழ்க்கையில் ஒட்டி உறவாடவேண்டும் - தனித்து நின்று விடக் கூடாது.

3. நம் சமூகத் திருமணம் பற்றிய கருத்தும் அதில் ஏற்படவேண்டிய மாற்றங்கள் பற்றிய கருத்தும் யாவை ?

நம்முடைய திருமணங்களில் இருக்கும் பழக்கவழக்கள் மிகவும் புராதனமானவை என்பதோடு இலக்கிய அடிப்படை வாய்ந்தவை யாகும். இலக்கிய அடிப்படையிலேதான் சடங்குகள் அனைத்துமே இருக்கின்றன. ஆனால், இந்தச்சமூகத்தில் இருப்பது போல் அதிகமாகச் சீர்வரிசைகள், கொடுக்கல் வாங்கல் பிற சமூகங்களில் இல்லை என்பதால் அதை மட்டும் இந்தத் திருமணங்களிலே மாற்றியாக வேண்டும். ஆடவர்கள் குறைவாகவும் பெண்கள் அதிகமாகவும் உள்ள சமூகம் ஆதலால், நாளுக்கு நாள் ஒரு பெண்ணைத் திருமணம் செய்வது என்பது கடுமையாகவும் சில நேரங்களிலே மிகக் கொடுமை யாகவும் ஆகிவிடுகின்றது. இதனல் ஆடவர்கள் தாம் திருமணங்களில் அதிகமாக வாங்காமலே நல்ல திருமணங்களைச் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தை உண்டாக்கிக்கொள்ள வேண்டும்.

4. இந்தியாவில் பல்வேறு மரபுகளில் பெண்களுக்குச் சீர்முறைகள் செய்வது என்பது மிகமிக அதிகமாகவே உள்ளது. இந்தப் பழக்கம் நம் சமூகத்தில் மட்டும் இருப்பதாகக் கருதுவது தவறு என்ற ஒரு கருத்து நம்மவர்கள் சிலரிடம் நிலவுகிறது. இது பற்றிய தங்கள் எண்ணம் என்ன ?

பிற சமூகங்களில் இருக்கின்றது என்பது மட்டுமே நாம் அந்தச் சீர்முறைகள் அதிகம் வாங்குவதற்கு நியாயம் ஆகாது. பிற சமூகங் களிலே இந்த அளவிற்கு இருக்கிறதா என்பது எனக்குத் தெரியவில்லை. என்றாலும் அந்தச் சமூகங்களில் இருக்கிறது என்பதாலே நாமும் வாங்க வேண்டிய அவசியம் இல்லை. அந்தச் சீர்வரிசைகள் சீர்முறை களைக் குறைத்துக் கொள்வதன் மூலமாகப் பெண்ணைப் பெற்றவர் களுடைய கஷ்டம் ஒரளவிற்குக் குறையும் - அதைச் சமூக அடிப்படை யிலே நோக்கினல் இந்தச் சீர்வரிசை முறை ஒன்றுதான் பயங்கரமாக இருக்கிறது என்று நமக்குத் தெரியும். ஆகவே இந்தக் கொடுமையி லிருந்து மீட்பதுதான் முக்கியமே தவிர வேறு சமூகத்தில் இருக்கிறதா என்பது முக்கியமல்ல.

5. நம்முடைய சங்கங்கள் பற்றிய தங்கள் கருத்துக்கள் யாவை ?

நமது சங்கங்கள் பல நன்கு இயங்குகின்றன. சில நன்கு இயங்க வில்லை. இளைஞர்களாகக் கூடி வைத்திருக்கின்ற சங்கங்கள் ஆங்காங்கு கல்விக்குப் பணம் கொடுத்துப் பின்னலே படித்துவிட்டு



கவிமலர்கள் தொகுக்கின்ற கவிமன்னர் தமக்கு
பெருந்தலைவர் சூட்டிய பேரன்புப் பெருமாலை

வந்த பிற்பாடு அவன் தொழில் செய்து வருகின்ற வருமானத்தில் அந்தப் பணத்தைப் பெற்றுக் கொள்கின்றன. அப்படி மதுரையிலும் கோவையிலும் சென்னையிலும் இருக்கின்றன. அவை இயங்குவது போல் ஏராளமான லட்சக்கணக்கான ரூபாய்கள் பின்னணியிலே உள்ள பெரிய சங்கங்கள் இயங்கவில்லை. இந்தச் சங்கங்களுக்கு ஏற்கெனவே மலாயாவும், பர்மாவும், இலங்கையும் வசதியாக இருந்த போது வந்த பணங்கள் எங்கே இருக்கின்றன, யாரிடம் இருக்கின்றன என்று தெரியாமலே இருக்கின்றன. அவற்றை மட்டும் வெளியிலே கொண்டுவந்தால்கூட வேறு பணம் சேர்க்க வேண்டிய அவசியமிருக்காது. அந்தச் சங்கங்கள் இயங்குவதற்கு வாய்ப்பாக இருக்கும்.

சென்னையில் தலைமைச் சங்கம் என்று ஒன்று வைத்து அதிலே சில ஊழியர்களையும் நியமித்து, யார் யார் திருமணம் ஆகாதவர்கள், யார் யார் வேலையில்லாதவர்கள், படிக்க வாய்ப்பில்லாதவர்கள் என்பது

போன்ற குறிப்புகளை எடுக்க வேண்டும் இந்தச் சங்கங்கள்: தொண்ணூற்று ஆருயிரம் பேர் மட்டுமே உள்ள ஒரு சமூகத்தில் இது கஷ்டமான காரியம் அல்ல. அது இயக்கமே இல்லாமல் - இந்தச் சங்கம் எங்கிருக்கிறது என்று தெரியாமல் வெறும் பேர் மட்டுமேதான் நாம் கேள்விப்படுகிறேமே தவிர, அதிலிருந்து ஒரு கடிதமோ லெட்டர் பேப்பரோ கூட நான் பார்த்ததில்லே. ஆகவே இந்தச் சங்கங்கள் ஒரு தலைமை நிலையம் கொண்டு இயங்கவேண்டும்.

6. தேசீயப் பொருளாதாரத்திற்கு நாம் செய்த பணிகளும் செய்ய வேண்டிய பணிகளும் யாவை ?

இந்தியாவினுடைய தேசீயப் பொருளாதாரத்திற்கே நம்முடைய சமூகம் ஏராளமாகச் செய்திருக்கிறது. தொழில் வளத்திலே மட்டு மல்லாமல் பிற எல்லாத் துறைகளிலும், நிதி அளிப்பதிலிருந்து சில முதலீடுகள் செய்கின்ற வரையில் நம்முடைய சமூகம் தேசீயப் பொருளாதாரத்திற்கு ஏராளமான வகையிலே உதவியிருக்கிறது. ஆனல் அது ஆங்காங்கு விளம்பரம் இல்லாமல் போயிருக்கிறது. ஒன்றுமே பொருளாதாரத்திற்கு உதவாதவர்கள் கூட விளம்பரம் செய்துகொள்ளும் திறமை உள்ள காரணத்தாலே அவர்கள் நிறைய உதவியதாகக் காட்சியளிக்கின்ருர்கள். ஆனல் நமது சமூகத்தில் டில்லியிலிருந்து மதுரை வரையிலே இந்தியாவினுடைய பல்வேறு துறைகளிலும் தொழில்களிலும் பல்வேறு தேவைகளுக்கான நிதி களிலும் நம்முடைய பங்கு பெரிதாக இருக்கின்றது. இது இந்த அளவிற்கு இன்னும் தொடரவேண்டும். ஆனல் அதே நேரத்தில் பத்திரிகைத் துறையிலும் ஏனைய துறைகளிலும் நாம் பெற்றிருக் கின்ற ஆதிக்கத்தை இவற்றுக்கான விளம்பரங்களுக்காக நாம் பயன் படுத்திக் கொள்ளவேண்டும்.

7. நாம் முன்னேடியாகக் கொள்ளத் தக்க சமூகம் எது - காரணம் யாது ?

நாம் முன்னேடியாகக் கொள்ளத்தக்கது என்பது மட்டுமல்ல, இந்தியாவில் உள்ள பிற சமூகங்களே முன்னேடியாகக் கொள்ளத் தக்க சமூகம் பிராமண சமூகம் ஆகும். காரணம் அந்தச் சமூகத்திலே ஒருவருக்கு ஒருவர் உதவி என்பதும் குறைந்த பட்சம் வாய் உதவி என்பதும் பரவலாக எங்கும் காணப்படும் - சொந்தம் இல்லாத ஒருவனைக்கூட வெகுதூரத்துச் சொந்தமாகக் கற்பித்துத் தான் போகின்ற இடங்களிலே வேலே காலியாக இருந்தால் தன் சமூகத்தைச் சேர்ந்தவர்களை எப்படியாவது கொண்டுவந்து சேர்க்கவேண்டும் என்ற ஆவலும் துடிப்பும் அந்தச் சமூகத்திற்கு இருக்கிறது. முன்னேறு வதற்காக அந்தச் சமூகம் எத்தகைய தொழிலேயும் கௌரவமான எந்தத் துறையையும் அது தேர்ந்தெடுத்துக் கொள்ளத் தயங்குவது



கலைக்குரிசில் அண்ணனும் - கவிக்குரிசில் தம்பியும்

கிடையாது. இந்தியாவிலுள்ள பிற சமூகங்களே மேற்கொள்ள வேண்டிய உதாரணம்—முன்னேடி பிராமண சமூகம் ஆகும்.

8. நம் சமூகம்:முன்னேற நகரத்தார் பத்திரிகை எந்த வகையில் உதவுகிறது? அது மேலும் வளர நீங்கள் கூறும் அறிவுரைகள் யாவை?

சமூகம் பற்றிய செய்திகள், சமூகம் பற்றிய விவரங்களைத் தருவதற்கு ஒவ்வொரு சமூகத்திற்கும் பத்திரிகை இருக்கிறது. நம்

முடைய சமூகத்திற்கு முன்னே தனவணிகன் என்று ஒன்று இருந்தது. ஊழியன் என்று ஒன்று இருந்தது. இப்பொழுது எதுவுமே இல்லாத நிலையில் இந்த நகரத்தார் பத்திரிகை ஒருவரோடு ஒருவர் உறவு கொள்ளத் தொடர்பு கொள்ள உதவுகின்றது. இந்தப் பத்திரிகையிலே இதுவரையிலே கல்யாணம் ஆகாமல் இருக்கின்றவர்களைப் பற்றிய விவரங்களைப் போட்டு மணமக்கள் தேவை என்கின்ற விளம்பரங்களையும் போட்டு, கொஞ்சம் நவீன முறையிலேயே நம்முடைய திருமணங்களையும் ஒரு சொசைட்டி கம்யூனிட்டி மாரேஜாக-நாற்பது ஐம்பது திருமணங்களை ஒன்றாக நடத்துவதற்கு உரிய வாய்ப்பாக ஒரு முயற்சி எடுத்து, இந்தப் பத்திரிகையிலே அது பற்றிய விவரங்களைக் கொடுத்து, பல பேரையும் அதுபற்றி எழுதச் சொல்லி இன்னும் தொடர்ச்சியாகப் பல காரியங்களைச் செய்ய முடியும்—இவ்வளவுதான் ஒரு பத்திரிகை செய்ய முடியும் என்பதில்லை. எவ்வளவோ செய்ய முடியும். நகரத்தார் என்ற முறையிலே உதவ முடியும்.

9. குடும்பக்கட்டுப்பாடு பற்றி நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?

குடும்பக்கட்டுப்பாடு பற்றிப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. இந்துக்களிடையே மட்டும் அது அதிகமாகப் பரப்பப்படுகிறது என்பதால், இன்னும் ஒரு நாற்பது ஐம்பது ஆண்டுகளிலே இந்துக்களைவிட பிற மதத்தவர் அதிகமாக ஆகிவிடுவார்கள் என்கிற பயம் நிலவுகிறது. ஆகவேதான் குடும்பக்கட்டுப்பாடு பற்றி அந்த ஒரு பயத்தைத் தவிர வேறு எந்தவிதமான பயமும் எனக்குக் கிடையாது.

இந்து சமூகம் குறைந்து பிற சமூகங்கள் அதிகரிப்பதனாலே ஆபத்து என்று நான் சொல்லமாட்டேன். உலகத்திலேயே இந்து மதத்தை அடிப்படையாகக் கொண்ட மிகப் பெரிய நாடு இந்தியா ஆகும். குடும்பக்கட்டுப்பாடு மூலம் அந்தநிலை மாறிவிடக் கூடாது என்பது ஒன்றுதான் என்னுடைய கவலையாகும். நம் சமூகத்திற்குக் குடும்பக் கட்டுப்பாடு தேவை, ஓரளவுக்குத் தேவை. இரண்டு என்று நிறுத்திக் கொள்ளாமல் நான்கு குழந்தைகளாவது வேண்டும் என்ற எண்ணம் எனக்கு உண்டு. காரணம் — இந்தச் சமூகம் பரவலாகப் பெரிய சமூகமாக ஆக வேண்டும் என்பதால்.

10. கல்வி, வேலை வாய்ப்பு இவற்றிலாவது நமது சமூகத்தைப் பின் தங்கிய சமூகமாக அரசு அறிவிக்க வேண்டும் என்ற கோரிக்கை பற்றி நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?

பின் தங்கிய சமூகமாக ஏற்கனவே நம் சமூகம் அறிவிக்கப்பட்டிருக்கவேண்டும். ஆனால் அப்படி அறிவிக்கப்படாமல் போனதற்கு மிக முக்கியமான காரணம், நம்முடைய சமூகத்திலே உள்ள மிகப் பெரிய

பணக்காரர்கள் சில பேர் நாங்கள் மிக முன்னேறிய சமூகம் என்று அன்றிருந்த ஆட்சியிடம், சொல்லி அதனுல் இதை முன்னேறிய சமூகமாக அறிவித்ததுதான் நம்முடைய சிரமங்களுக் கெல்லாம் காரணம் — அன்றைக்குக்கூட இதைப் பின் தங்கிய சமூகமாக அறிவிக்க வேண்டும் என்று விழா ஒன்றில் தோழர் கருணுநிதி அவர் களிடம் நான் சொன்னேன். அதுபற்றி யோசிப்பதாக அவர் கூறி யிருக்கின்ருர். பின் தங்கிய சமூகமாக அறிவிப்பதன் மூலமாகக் கிடைக்கின்ற சலுகைகள். நம்முடைய சமூகத்திலே இருக்கின்ற ஏழைகளுக்கு நிச்சயமாகப் பயன்படும். இல்லை என்ருல் முன் தங்கிய வகுப்பு என்ற முத்திரையோடு பின்தங்கிக் கிடக்கின்ற பலபேரை நாம் முன்னேற்ற முடியாது.

11. இலக்கியத்துறை — அரசியல் துறை — கல்வித்துறை ஆகிய வற்றில் நம் சமூகம் செய்துள்ள சேவைகள் யாவை? செய்ய வேண்டிய சேவைகள் யாவை?

இலக்கியத்துறையில் நமக்குப் பெரும் பங்கு உண்டு. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திலே இருந்து, இன்றைக்கு நன்ருக இயங்குகின்ற வானதி பதிப்பகம் வரை இந்தப் பதிப்பகங்கள் அனைத்துமே நம்முடைய பொருளாதாரத்தில் வளர்ந்தவை—அல்லது நம்முடைய ஆட்களாலே வளர்ந்தவை. ஏராளமான இலக்கியங்களை புத்தகங்களாக ஆக்கித் தந்த பெருமை இவற்றிற்கு உண்டு. ஏராள மான புத்தகங்கள் வெளிவருவதற்கு உதவி செய்த பெருமையும் இவற்றிற்கு உண்டு. சொல்லப் போனுல் தமிழ்நாட்டின் பண்டைய இலக்கியங்கள் ஐம்பெருங்காப்பியங்கள் உட்பட ஏட்டுப் பிரதி யிலிருந்து அச்சிற்கு அவை வந்தபோது நம்முடைய சமூகத்தில் உள்ள வர்கள்தான் அவற்றிற்கு உதவி அளித்தார்கள். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகப் புத்தகங்களைப் பார்த்தாலே இது தெரியும்.

அரசியல் துறையில் நம்முடைய தலைவர்கள் சிலர் பெரும் சேவை செய்திருக்கிருர்கள். சா. கணேசன் அவர்களைப் போல — என்ருலும் நல்ல நேரங்களில் தக்க சூழ்நிலைகளை அவர்கள் உருவாக்கிக் கொள்ள வில்லை. நான் உட்படப் பலபேரும் அதைப் பயன்படுத்திக் கொள்ளாத நிலையில், இன்றைக்கு இருக்கின்ற இளைஞர்கள் அதில் தீவிரமாக ஈடுபட்டு எதிர்காலத்திலேயாவது பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

கல்வித்துறையிலே நாம் செய்துள்ள சேவையும் மதத்துறையிலே நாம் செய்துள்ள சேவையும்—ஒன்றிரண்டல்ல. இதுவரை செய்தவை அதிகம் என்ருலும், இனியும் செய்யவேண்டியவை இதே முறையிலே செய்ய வேண்டியவைதான் பாக்கி இருக்கின்றன,

2

12. கடந்த இருபத்தைந்தாண்டுத் திரைப்பட வாழ்க்கையில் நீங்கள் இயற்றியுள்ள திரைப்பாடல்கள் எத்தனை? எழுதிய படங்கள் எத்தனை? நீங்களே தயாரித்த படங்கள் எத்தனை?

கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் சுமார் மூவாயிரம் பாடல்களும் சுமார் நானூறு படங்களும் ஆகும். சொந்தமாகப் பதினொரு படங்களை எடுத்துள்ளேன்.

13. சில காலம்கூட நிலைத்து நிற்க முடியாத திரைப்படத் துறையில் தொடர்ந்து இருபத்தைந்து ஆண்டுகாலம் நிலைத்து நிகரற்ற புகழோடு நீங்கள் விளங்கும் வெற்றிக்கு என்ன காரணம் என்று நீங்கள் கருதுகிறீர்கள்.

இருபத்தைந்து ஆண்டுகாலம் தொடர்ந்து இந்தத் துறையிலே நிலைபெற்று நிற்பதற்குக் காரணம் தொழிலிலே உள்ள அக்கறை— வேறு எந்தப் பழக்க வழக்கங்கள் இருந்தாலும்கூட அந்தத் தொழிலைக் கவனிப்பதை மட்டும் மிக ஜாக்கிரதையாகவும் உற்சாகமாகவும் நான் வைத்துக் கொண்டிருக்கின்ற காரணத்தால் தொடர்ந்து இதிலே நிற்க முடிகிறது. காலங்களுக்கு ஏற்ப எழுத்தையும் முறையையும் அந்தந்தக் காலங்களுக்கு ஏற்பத் தேவையான அளவிற்கு மாற்றிக் கொண்டு வந்துள்ள காரணத்தாலும் ஒவ்வொரு சீசனிலும் நான் நிற்க முடிகிறது.

14. கவிதை— கலை— அரசியல் இவற்றில் எந்தத் துறையில் உங்களுக்கு ஈடுபாடு அதிகம்.

எனக்கு மிக அதிகமாக ஈடுபாடு உள்ள துறை மூன்றுமேதான். கவிதை—கலை—அரசியல் மூன்றுமேதான். என்றாலும்— முதலாவதாகச் சொல்லக்கூடியது கவிதை. இரண்டாவதாகச் சொல்ல வேண்டியது கலை— மூன்றாவதாகச் சொல்லவேண்டியது அரசியல். அது முறைப்படியே முறைப்படுத்தப்பட்டிருக்கிறது.

15. கவிதை, திரைப்படப்பாடல் இவற்றில் உங்களை அதிகம் கவர்வது எது?

நான் கவிதைகளையேதான் அதிகம் விரும்புகிறேன். காரணம் அது மனோதர்மத்திற்கு எழுதப்படுவது. திரைப்படப்பாடல் என்பது அந்தந்தப் பாத்திரங்களுக்கு ஏற்ப அவற்றின் குண விசேஷங்களுக்கு ஏற்ப எழுதப்படுகிறது என்பதால் அதிலே என்னுடைய சொந்தக் கருத்து என்று ஒன்றும் வருவதில்லை. ஒரு நாஸ்திகன் பாடுவதாக இருந்தால் கடவுளைத் திட்டியும் ஆஸ்திகன் பாடுவதாக இருந்தால் போற்றியும் எழுதுகின்ற பாடல்களிலே சொற்கவர்ச்சி பொருள் கவர்ச்சி இருக்கலாமே தவிர, சொந்த அபிப்பிராயம் இருக்கமுடியாது. கவிதையிலே அது இருக்கிறது என்பதால் என் இஷ்டத்திற்குச் செய்ய முடிகிறது என்பதால் கவிதை எனக்குப் பிடித்தமான துறை ஆகிறது.

16. நீங்கள் எழுதிய நூல்கள் எத்தனை? அவற்றில் உங்களுக்குப் பிடித்தமான நூல் எது?

நான் நூலாக எழுத வேண்டும் என்று உட்கார்ந்து எழுதியது வனவாசம் ஒன்றுதான். பாக்கி அனைத்துமே தொகுப்புக்கள் ஆகும். இருபது இருபத்தொரு தொகுப்புக்கள் வந்திருக்கின்றன. ஆனால் நூல் என்ற அளவிலே எனக்கு மிகவும் பிடித்தது வனவாசம் ஆகும். கவிதைத் தொகுதிகள் இருக்கின்றன என்றாலும் வனவாசம் நான் மிகவும் உற்சாகத்தோடு எழுதிய சுயசரிதம் என்பதால் எனக்கு அது மிகவும் பிடிக்கிறது.

17. நமது சமூகத்திற்கு என்று நிலையாகச் செயல்புரியும் திட்டம் ஏதாவது உங்களுக்கு இருக்கிறதா? இருப்பின் அது பற்றிய விவரம் யாவை?

நமது சமூகத்திற்கு என்று நிலையாகச் செய்யவேண்டிய திட்டம் என்பது தலைமைச் சங்கம் என்று ஒன்று வைத்து ஆட்கள் வைத்து சென்ஸஸ் ஒன்று எடுத்து எவ்வளவு பேர் எங்கெங்கே இருக்கிறார்கள் என்னென்ன செய்யவேண்டும் என்பதை வகுக்க வேண்டும். அப்படிச் செய்து நாற்பது ஐம்பது திருமணங்களை ஒன்றாக நடத்தி, நம்முடைய சமூகத்தைச் சேர்ந்தவர்களுடைய தொழில்நிலையங்களில் அவர்களுக்கு வேலை வாங்கித் தர வேண்டியது மிகவும் முக்கியம் ஆகும். இந்தக் கருத்தினை ராஜா அவர்கள் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். மா. கண்ணப்பன் அவர்கள் இந்த முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

18. தமிழகப் பத்திரிகை வரலாற்றில் நிலையான இடம்பெற்ற தென்றல்— கண்ணதாசன் பத்திரிகைகள் ஏன் தொடர்ந்து வெளிவரவில்லை. அந்தப் பத்திரிகைகளில் ஒன்றையோ வேறு புதிய பத்திரிகை ஒன்றையோ வெளிக் கொண்டுவரும் எண்ணம் இருக்கிறதா?

ஒரு பத்திரிகை நடத்துவதிலே எனக்கு உற்சாகம் உண்டு. எழுதுவதிலே திறமையாக எழுதவும் முடியும். அந்த பத்திரிகையை அழகாகக் கொண்டுவர முடியும். என்றாலும் பல துறைகளில் இருப்பதால் நிர்வாகம் பண்ண முடியாத நிலையில் அந்தப் பத்திரிகையைக் கவனிக்க முடியாமல் போகிறது என்பதாலேயே தென்றலும் நின்றது கண்ணதாசனும் நின்றது. கண்ணதாசன் பத்திரிகையை மீண்டும் நல்ல அஸ்திவாரத்தோடு கொண்டுவர வேண்டும் என்கின்ற ஆசை இருக்கிறது எனக்கு.

19. உங்கள் பொழுதுபோக்கு யாது?

பொழுது போக்கு என்பது சாதாரணமாக எனக்கு மது அருந்துவதுதான். வேறு பொழுது போக்கு என்று ஒன்றுமில்லை. சினிமாவுக்குச்

கூட நான் போய்ப் பல வருடங்கள் ஆகிவிட்டன. புத்தகம் படிப்பதும் இந்தப் பழக்கமும் தான் இப்பொழுது எனக்குப் பொழுது போக்காக இருக்கிறது. அமைதியாகவும் இருக்கிறது.

20. சொந்த வாழ்வில் உங்கள் ஆசையும் பொதுவாழ்வில் உங்கள் லட்சியமும் என்ன?

சொந்த வாழ்வில் இன்னும் ஏதாவது காவியம் எழுதவேண்டும் என்ற ஆசை உண்டு. பொது வாழ்வில், இவ்வளவு காலம் நாம் செய்த சேவைக்குத் துணையாக சேவையினுடைய வெற்றியாக எதிர் காலத்தில் பிரகாசமாக விளங்க வேண்டும் என்கின்ற எண்ணமும் உண்டு.

# திருச்சி சுவாமிகள்

பாண்டி நாட்டைப் பழம் பதி என்பார்கள்.

பதி என்ருல் நல்ல நாடு, நல்ல ஊர், நல்ல தலைவன் இவற்றை யெல்லாம் குறிக்கும், நல்ல சொல்லாகும்.

பாண்டிநாடு நல்ல நாடு. மதுரையம்பதி நல்ல நகரம். பாண்டியன் நெடுஞ்செழியனும் மற்றும் பண்பை வளர்ந்த பல பாண்டிய மன்னர்களும் நல்ல தலைவர்கள்.

எனவே பாண்டிய நாடு பழமைக்குப் பழமையாகவும் புதுமைக்குப் புதுமையாகவும் விளங்குகின்ற பெருமை உடையது.

வீரத்தை விளைவித்த நாடு-வளத்தைப் பெருக்கிய நாடு, செல்வத்தை மிகுந்த நாடு எண்ணற்றவை.

மொழிகாக்கச் சங்கம் வைத்து முத்துமுத்தாய் இலக்கியங்களை உருவாக்கிய ஒரு நாடு திருநாடு பெருநாடு பாண்டியநாடு.

எதிரிகள் அழித்ததாகச் சரித்திரம் உண்டு. இயற்கையிலேயே இருமுறை (கடல் கோள்கள்) பாண்டியப் பெருநாட்டை விழுங்கியும் தமிழ் வளர்த்த இருசங்கங்களைத் தேய்த்தும் மூன்ரும் சங்கம் வைத்து மொழி வளர்த்த முத்தமிழ் திருநாடு, பாண்டி நாடு.

இறைவன் உமாதேவியை மணந்த பூரிப்பில் உயர்ந்தது இந்தப் பாண்டியநாடு.

அதுகாலை சமமாக்கக் குருமுனி அகத்தியர் குடிபுகுந்த நாடு.

அகத்தியம் பிறந்ததும், தொல்காப்பியம் உயர்ந்ததும் - அகமும் புறமும் ஆகிய இலக்கியங்கள் மலர்ந்ததும் பைந்தமிழ் பாண்டி நாட்டில்.

மொழிகாத்த சங்கமதில் மூலவராம் இறைவனும் வந்திருந்து வாழ்த்தியதும் அருள் வேண்டும் பக்தருக்கு அருள்புரிய வேண்டி அறுபத்து நான்கு விளையாடல்களை இறைவன் அழகோடு நடத்தியதும் அன்னை ஈஸ்வரியாள் அங்கயற்கண்ணியாகி ஆட்சி புரிந்ததும் அந்தத் திருநாட்டில்தான். சொல்லுவார் சொல்லுக்கெல்லாம் சுவையாகி, பொருளாகி, புதுமையாகி, பொலிவாகி, புகழாகி, கண்ணகியாள் நீதிக்குக் களமாகி விளங்கியது பாண்டியப் பெருநாடு.

இந்த நாடு பாண்டிய மன்னர்களுக்குப் பிறகு நாயக்க வம்சத்தாரால் ஆளப்படும் சூழ்நிலையைப் பெற்றது. நாயக் என்ருல் தலைமை என்பதே பொருளாகும். ஆகவே வழிவழி நேர்மையாலும் நீதியாலும் நெறி முறைகளாலும் தலைமை யுடையவர்களாகவே என்றென்றும் விளங்கிய பாண்டிய மன்னர்களுக்குப் பிறகு, அத்தகைய குண இயல்பு கொண்ட நாயக்க வம்சத்தினர் பாண்டிய நாட்டினை ஆண்டது அந்த மண்வளம் என்றே குறிப்பிடலாம்.

விஜயநகரப் பேரரசை நிருமாணித்த கிருஷ்ண தேவராயரும் மதுரையம்பதியில் மகாலையும் மாபெருந் தெப்பக் குளத்தையும் உருவாக்கி மங்காத புகழ் பெற்ற திருமலை நாயக்கரும் பிற்காலச் சந்ததியினரில் பெண்களும் ஆட்சி செய்யலாம் என்பதற்கு ஒரு முன்னோடியாக விளங்கிய ராணி மங்கம்மாவும் இந்த மரபிலே தோன்றியவர்கள் தாம்.

நாயக்க மரபினர் வரலாறு தென்னகத்தில் பிற்கால வரலாற்றில் பேரிடம் பெறத்தக்கது; பெருமைக்கு உரியது.

இத்தகைய புகழ்மிக்க நாயக்கர் வம்சத்தில் தான் நம் சுவாமிகள் அவதரித்தார்கள் என்பது நமக்குச் சிலிர்ப்பைத் தருகிறது. சித்த ராகவும் ஞானியாகவும் அன்னை இராசேசுவரியின் அருட் குழந்தை யாகவும் அந்த அன்னையாகவும் கருணைப் பார்வையாலேயே கலியெல்லாம் நீக்குகின்ற கடலாகவும் விளங்குகின்ற நம் சுவாமிகளின் வரலாற்றை அடுத்த இதழிலிருந்து காண்போம்.

# மலேசியநாட்டில் நகரத்தார் திருமணம்

அண்மையில் மலேசியத் திருநாட்டில் நம் மரபினர் திருமணம் ஒன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது.

காலப்போக்கை ஒட்டி, பணிபுரிகின்ற, அல்லது தொழில் புரிகின்ற நாட்டிலேயே திருமணங்கள் நிகழ்வது சாலச் சிறந்தது என்ற கருத்துக்கு அணிகலனாக, மலே நாட்டிலேயே திருமணம் புரிந்து கொண்ட மணமக்களை மிகுந்த பெருமிதத்துடன் நம் பெருமக்களுக்கு அறிமுகப் படுத்துகின்றோம்.



மணமகள். முல்லை - மணமகன்: இராமையா

மணமகன்: பேரா லெங்கோங்கில் இருக்கும் சி. பழ. இராம. அழ. பி. ஜே. கே. பி. பி. என். (சொந்த ஊர் திருச்சி மாவட்டம் வேகுப்பட்டி) அவர்களின் புதல்வர்.

மணமகள்: சிங்கப்பூர் பல்கலைக் கழகத்தில் பணி புரியும் திரு. ப. அருணாசலம் (சொந்த ஊர் இராமநாத புரம் மாவட்டம், சொக்கலிங்கம்புதூர்) அவர்களின் புதல்வி.

மலேசியாப் பல்கலைக் கழகத்தில் பி. ஏ. ஆனர்சுப் பட்டம் பெற்றுள்ள மணமகன், கிள்ளான் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராகவும் மலேசியாப் பல்கலைக்கழகத்தில் பகுதிநேர விரிவுரையாளராகவும் மலேசியா வானொலியில் பகுதிநேர அறிவிப்பாளராகவும் பணிபுரிந்து வருகிறார்.

செல்வன் : இராமையா, செல்வி : முல்லை திருமணம் கோலாலம்பூர் செட்டியார் மண்டபத்தில் கோலாகலமாக நடைபெற்றது. இரண்டாயிரத்திற்கும் அதிகமான பிரமுகர்கள் வந்து வாழ்த்திச் சிறப்பித்தார்கள்.

நம் உள்ளங்கனிந்த நல்வாழ்த்துக்களை மணமக்களுக்கு உரிமையாக்குவதுடன் தமிழகத்திலிருந்து அரு. பெரியண்ணன் மீனாள் தம்பதியினர் மணமக்களுக்கு அனுப்பிய வாழ்த்தினை மகிழ்ச்சியுடன் வெளியிடுகின்றோம்.

## என்றென்றும் வாழ்க இனிது!

அருணாசலம் நாச்சாள் அன்புமகள் முல்லை
திருமணம் என்றதிருச் செய்தி — பெருமகிழ்வாம்
இன்பத்தைப் பாய்ச்சியதே எம்முளத்தில் செல்வமகள்
என்றென்றும் வாழ்க இனிது.

அழகப்பர் மைந்தன் இராமையா முல்லை
தொழுங்கணவன் என்றறிந்தோம் தூய — இளந்தமிழன்
அன்புடனே முல்லை அகங்களிக்கும் தோழனாய்
என்றென்றும் வாழ்க இனிது.

பற்றுதற்கு முல்லைக்குப் பாரியெனத் தோளீந்து
சுற்றுதற்குத் தானே துணையானான்— முற்றமுற்ற
இன்பம் பெருகிவரும் இல்லறமே நல்லறமாய்
என்றென்றும் வாழ்க இனிது.

தெண்டா யுதபாணிச் செட்டியார் மண்டபத்தில்
கண்டார் மணமே களின் பெறவே — கொண்டாடும்
இன்றுபோல் முல்லை இராமையாச் செல்வங்கள்
என்றென்றும் வாழ்க இனிது.

பூப்போன்ற முல்லைக்குப் போற்றும் இராமையா
காப்பானான்; வாழ்வின் களிப்பானான் — பாப்போலும்
மன்றல் மணவாழ்க்கை மிக்க மகிழ்ச்சிதர
என்றென்றும் வாழ்க இனிது.

பெரியண்ணன்-மீனாள்

# மலருக்கு முகப்பூச்சும் வேண்டுமா?

மு. சுப. கருப்பையா, குருவிக்கோண்டான் பட்டி

முன்னுரை :

"பொன்னுலகம் காண்பேன்! வாங்கும் கவிமழையில்
மண்ணுலகைத் தோய்ந்து மயக்கம் பிறக்கவைப்பேன்."

எனக்கூறி, "பத்து விரல்களுள்ளும் பாட்டினை ஊற்றிவைத்து, முத்தாய் உதிர்ப்பவர் கவியரசு கண்ணதாசன். அவரது மனமென்னும் எண்ணப் பூங்காவிலே பூத்த வண்ண மலர்கள் எண்ணில் அடங்கா; எழுத்திலும் அடங்கா. ஆலம் விழுதென வண்ணக் கொடி—பல ஆயிரமாயிரம் நாட்டுகின்ற அவருடைய கவிதைப் பூங்காவிலே பூத்துக் குலுங்குகின்ற அன்றலர்ந்த மலர்களிலே அழகுண்டு, அதனுள் மதுவுண்டு. அந்த மலர்கள், பொன்மலர் மணம் பெற்றதுபோன்றவை. அவைகளிலிருந்து வருகின்ற கவிநயம் என்னும் மணம் என்றென்னும் நிலைத்திருப்பது. மலர்போன்ற மங்கையர்கள் தங்களது அழகில்லா முகத்திற்கு அழகூட்டுதற்காக இன்று பல்விதமாயின வண்ணங்களிலே முகப் பூச்சுக்களை நாடுகின்றனர். ஆனால் கண்ணதாசனின் மலர்களுக்கு, கவிதைப் பெண்களுக்கு இயற்கையிலேயே நல்ல மணமும், நல்ல குணமும் உண்டு. அந்த மலர்களுக்குச் செயற்கையான முகப்பூச்சு எனும் உரைகூறி வணக்கம் கூறுதல் தேவையில்லை. இவரது கவிதை நயத்தினை நன்கு இரசிப்பதற்கு இடைத்தரகர் யாரும் தேவையில்லை. ஏனெனில் இவருடைய கவிதைகள் தம்மைத்தாமே விளக்கி நிற்கும் ஆற்றல் பெற்றவைகளாக அமைந்துள்ளன. அவரது வண்ணப் பூங்காவில் நுழைந்து, அங்கு மதுவினை ஏந்தி, "மாந்திட வருக! வருக!!"என அழைக்கின்ற கவிதை மலர்களில் அமர்ந்து, தேனென பாலென ஊறிநிற்கின்ற கவிநயமென்னும் தேனினைப் பருகுவோமா :

ஆட்டனத்தி ஆதிமந்தியில் ஓர் அழகான காட்சி:-

நமது பண்டைப் புலவர் பெருமக்கள் எழுதியதுபோல 'ஐங்குறுங் காப்பியங்களை' அழகுப்பெறப் பாடியுள்ளார். அதனுள் அழகுக்கு அழகுசெய்யும் அருமையான பாடல்கள் பலவற்றைக் கொண்டது 'ஆட்டனத்தி ஆதிமந்தி'யின் காப்பியம். கதைத் தலைவனை ஆசிரியர் எவ்வளவு நயம்பட அறிமுகம் செய்கிறார் பாருங்கள்.

"'வஞ்சியான் என்றால் அன்னான்; 'வஞ்சியின் மன்னன்' என்றும்
'வஞ்சியான் பிறரை' என்றும்; மன்னன் கரிகால் சோழன்
வஞ்சியை மணந்தான் என்றும்; வகைப்படும் பொருட்கள்
வஞ்சியான் வஞ்சி நெஞ்சிலே; வாழ்ந்ததே நமது காதை"

என்று வஞ்சி மன்னன் ஆட்டனத்தியை அழகுபெற அறிமும் செய்வார். கவிஞர் வஞ்சிமேல் வஞ்சமின்றிக் கொஞ்சிப் புகழ் கின்ருர். காவியத்தின் முதல் பாடல் இது. நுனிக்கரும்பே இனிக் கிறது. அடிக்கரும்பைப் பற்றிச் சொல்லவா வேண்டும்?

கடுவூர்ச்சோழன் நல்லிடிக் கோன், ஆதிமந்திமீது காதல் மீதூற, ஒரு பெண்ணைத் தூதாக அனுப்பினுன். ஏன்? ஆணைத் தூதாக அனுப்பக்கூடாதோ வெனின், ஆணுயின் அவளைக் கண்டு ஆசைக்கொண்டால் என்னசெய்வது? எனவே தூதாகப் பெண்ணை அனுப்பினுன். அந்தப் பெண் சென்ருள்; அவளைக் கண்டாள்; களிப்புமிகக் கொண்டாள். அவள் கருத்தினை மாற்றிடப் பல்வேறு வழிகளில் முயன்ருள்; தவித்தாள்; தழன்ருள்.

"விலைபேசும் சரக்கல்ல காதல்': என்றவள், பின்னர்,
கரையாத மனத்தைநீ கரைத்தால்கூட
கரையாத என்மேனி கறையாகாது"

என்ருள். கரையாத என்னுடைய மனத்தை நீ கரைத்தால்கூட என்னுடைய மேனி, என்றும் கறைபடாது என்பதோடு நல்லிடிக் கோன் கறையுடையவனென்றும், ஆட்டனத்திபோன்ற தூயவருடன்தான் நான் கூடுவேன் என்றும் பலவிதமான நயத்தினை வைத்து நலம்படக் கூறுகின்ருள்.

கவிதைக் களஞ்சியத்தில் கண்டெடுத்த முத்துக்கள் :-

கவிஞரின் கவிதைகளையெல்லாம் நான்கு தொகுயாக வெளியிட்டுள்ளனர். அவையாவும் கவிதைக் கடலுக்கு மடைபோட்டு வைத்திருக்கும் மாபெரும் சக்திகள். அக்கவிதைக் கடலுள் எண்ணிலடங்கா எழில்மிகு முத்துக்கள் கொட்டிக்கிடக்கின்றன. இறைவன் கொடுத்த இரண்டு கைகள் போதவில்லை. அந்த முத்துக்களை அள்ள; கண்கள் இரண்டு போதவில்லை, அதன் எழிலினைக் காண. பத்துத்தலை உடையான் இராவனனும், ஆறுமுக முடைய ஆறுமுகனும் கண்ணதாசனின் கவிதைகளைப் படித்தால் எவ்வளவு மகிழ்வடைவார்களோ? நான் ஆறுமுகனுகப் பிறக்க வில்லையே என்று கவலையாக இருக்கிறது. அது சரி, போதுமென்ற மனத்தோடு புதுமைக் கவிதைகளில் நானெடுத்த முத்துக்களைப் பாருங்கள்.

'முத்தையா' எனும் இளைஞன், சிறு கூடற்பட்டி நகரத்தே கவியினைக் கையிலெடுத்து சிலம்பம் ஆடுவதுபோல் சொற்சிலம்பம் விளையாடிக் கொண்டிக்குங்கால், ஓர் மங்கை அவன் எதிர்பட்டாள், "அண்ணலும் நோக்கினுன்; அவளும் நோக்கினுள்"எனக் கம்பன் கூறியதுபோல அவன் அவளைக் கண்டான்; அவள் அவனைக் கண்டாள். கண்கள் கலந்தன; கருத்தொருமித்தனர். இந்த அழகு மிகு காட்சியை எப்படிப் பாடுகின்ருர்?

"சின்னஞ்சிறுவயதுக் செல்வியவள்! என்னெஞ்சில்
சின்னமனே கட்டச் சேர்த்தாள் முதற் செங்கல்!'!

"ஆதாம் ஏவாள் அடிக்கல் நாட்டிய ஆனந்த மாளிகையைப்போல் காதல் மாளிகையைக் கட்டஅவள், கண்ணெடு கண்ணினே நோக்கி, அதன் அஸ்திவாரக் கல்லை வைத்தாளாம். என்னே அழகு! என்னே இவர்தம் நயம்மிகு பாடல்!!

"சொத்து சுகம்நாடார்! சொந்தத் துணைநாடார்
பொன்னென்றும் நாடார் பொருள் நாடார்—தான்பிறந்த
அன்னையையும் நாடார்! ஆசை தனைநாடார்
நாடொன்றே நாடித்தம் நலமொன்றும் நாடார்
நாடாரை நாடென்ருர்! நாடினேன்

என்று வருகின்ற கவிதையிலே பெருந்தலைவர் காமராசரை அழகாக-அருமையாக-நயமாகப் பாடியுள்ளார் காணுங்கள்.

தாய் தந்தையர்கள் தங்களால் முடிந்த அளவு வேலை செய்து தங்கள் குடும்பத்தைக் காண்கின்றனர். பின்னர், அவர்கள் ஓய் வெடுக்க, அவர்கள் பெற்ற பிள்ளைகள்தானே அவர்களைக் காக்க வேண்டும்! ஆலமரத்தின் வேர். வலுவிழந்து—வாழ்விழந்து போகும் நேரத்தில் விழுதுகள்தானே காக்க வேண்டும்? அதற்காகத்தானே மரம், விழுதைப் பெறுகிறது, தாய் தந்தையர் பிள்ளைகளையும் பெறு கின்றனர்? அப்படி வேர் வலுவிழந்து போனபோழ்து விழுது வாழ் விழந்துபோனுல்... என்ன செய்வது? பெற்றமகன் பெற்றவர்களைக் காக்காது இறந்துவிட்டால் என்ன செய்வது? இந்தக் கற்பனையோடு உவமை கலந்து, இவையும் போதாதென்று நயமாகவும் பாடு கின்ருர். ஏன்? இத்தனை இனிமை வழங்கும் இலக்கியக் கூறுகள் இவ்விடத்தில் தேவையா? எனக் கேட்கின்றீர்களா? ஆம். ஆம், கவிஞர் பாடுவது ஓர் கையறு நிலைப்பாடல்; சோககீதம். பட்டுக் கோட்டை கல்யாணசுந்தரம் அவர்கள் இறந்த காலையிலே அவலத்தை மறைக்க அனைத்து இலக்கிய உத்திகளையும் பயன் படுத்திக் கவிதையை எழுதியுள்ளார் எனினும் நமது கண்கள் குளமாகின்றன.

"விழுதுவிட வந்தமகன்
விழுந்துவிட்டான் சாவினிலே

என்ற இரண்டே வரிகளில் மேற்கூறிய நலமெல்லாம் நயமாகப் புதைந்திருக்கின்றன.

**திரைஇசைப் பாடல்களில் திகட்டாத பெருவிருந்து:**

கவிஞரின் இருபத்தைத்தாண்டுப் பணியில் மூவாயிரத்துக்கும் மேற்பட்ட பாடல்களை நாம் முன்செய்த தவத்தால் பெற்றுள்ளோம். அவற்றிலே திகட்டாத பெருவிருந்து என்றென்றும் நமக்காகக் காத்திருக்கிறது. உதாரணமாக ஒன்றைக் காண்போம்.

இறைவனைப் பற்றிப் பாடுகின்ற ஒரு குழுப்பாடலிலே வருகின்ற இரண்டே வரிகளைப் பார்ப்போம்.

"மலையும் நீயே! கடலும் நீயே!
வானும் நீயே! நிலமும் நீயே!"

என்பதே அவ்வரிகள். இறைவனும் மலையும் எவ்வாறு ஒன்று வார்கள்?

"அளக்க லாகா அளவும் பொருளும்
அளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே"

என்ற நன்னூல் வரிகளைக் காணுங்கள். அளக்கமுடியாத வடிவமும், பொருளும் கொண்டு, எவராலும் அசைக்க முடியாத தன்மையும், மழைபெய்யாக் காலத்தும் பல உயிர்களைக் காக்கின்ற பெருந் தன்மையும் உடையது மலை. அதுபோல இறைவனின் கருணையை அளவிட்டு உரைக்க முடியாது. அவன் அருளிய பொருள்களும் அளப்பில... எவராலும் அசைக்க முடியாத நிலைபேற்றை உடையவன் உலக வாழ்வில் இன்பமின்றித் துன்பத்தில் உழன்றாலும் அவர்களைக் காப்பவன் இறைவன். எனவே முதலில் மலையே என்றார்.

உலகத்தில் மூன்றில் இரண்டு பங்கு கடல் சூழ்ந்துள்ளது. எனினும் கடல் தண்ணீரை அள்ளிப் பருகமுடியாது. மேகம் தானாக வந்து முகந்து செல்ல இடமளிப்பதும் மழை பொழிய உதவுவதும் கடல்தானே. அது தன்னுள்ளே கோடிக்கணக்கான உயிரினங் களையும் முத்தையும் பவளத்தையும் கொண்டுள்ளது. அதுபோல பார்க்குமிடமெங்கும் உலகில் நீக்கமற நிறைபவன் இறைவன். அவனை நாடிச் செல்கிறவர்களுக்கு அவன் வாரி வாரி அளிப்பான்; கருணை மழை பொழிவான். தன்னுள்ளே பல கோடிக்கணக்கான மக்களை வைத்துக் காப்பவனும் அவன்தானே? எனவே இரண்டா வதாகக் கடலைக் கூறினார்.

வானம் இல்லாவிடில் வாழ்வில்லை. வானம்தான் காற்றைத் தருகிறது; சூரியனின் ஒளியைத் தருகிறது, சந்திரனின் குளிர்ச்சியைத் தருகிறது; இவற்றினும் இன்றியமையாத மழை யைத் தருகிறது. கடலினின்று முகன்டுவந்த நீரைப் பாரியினும் சிறந்துநின்று மாரியாகப் பொழிகிறது. இதுபோல் வாலறி வனின்றி வாழ்வில்லை. உயிர் என்னும் காற்றைத் தருபவனும் அவனே. இதனோடு இன்றியமையாத அன்புமழை சொரிபவனும் அவனே. உலகப் பொருள்கள் பலவற்றை எடுத்து எடுத்து தனது மெய்யன்பர்களுக்கு வழங்கிக்கொண்டேயிருப்பான் எனவே அவனை வானத்தோடு ஒப்பிட்டார்.

தன்னைச் சுமந்து கொள்வதோடு தன்மேல் வாழுகின்ற உயிர்கள் அனைத்தையும் சுமப்பது நிலம். நிலமின்றி நாம் எதிலே வாழ்வது? எதிலே வீட்டைக் கட்டுவது? நமக்கு இன்றியமையாது தேவைப் படும் அடிப்படைத் தேவைகளான உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் நிலத்தினின்றுதானே பெறப்படு கின்றன? தன்னை அகழ்ந்தாலும் பொறுத்துக் கொள்வதும், அகழ்ந்

தார்க்கே நெல்லும், மணியும் தங்கமும் வெள்ளியும் வைரமும் பல பொருள்களையும் அளிப்பதைவிடக் குடிக்க நீரைத் தருவதும் நிலம்தானே? நிலத்தை அடிப்படையாக வைத்துத்தானே நாம் உயர்ந்த வாழ்வு வாழ்கின்றோம்? எனவே நிலத்தோடு இறைவனை ஒப்பிட்டுப் பாடுகின்றார். ஏனெனில் இறைவன் நம்மையெல்லாம் தாயாக நின்று கருவிலே சுமக்கிறான், பின் தரணியாக நின்று வீழும்வரை சுமக்கிறான். விழ்ந்தவன் தன்னையும் தானே பாதுகாக்கிறான் மண்ணுள் வைத்து. அவனின்றி ஓரணுவும் அசையாது. அவன்தான் நமக்கு அடிப்படைத் தேவைகளையெல்லாம் தருகின்றான். அவனைத் திட்டினாலும் அவன் அகமும் முகமும் மலர்ந்து அருள் செய்கின்றான். அவனது கருணை வெள்ளமின்றி நாம் வாழ இயலாது. அவனை முதலாகக் கொண்டு வாழ்த்திப் பாடிய பின்னர் நாம் உயர்வடைய முடிகிறது. எனவே "நிலம் நீயே!" என்று பாடினார்.

ஏன் நிலத்தை நான்காவதாக வைத்துப்பாட வேண்டும்? இயற்கையில்கூட முதல் இடத்துக்கு எல்லாம் முந்துகின்றனவோ? மலைக்கு முதலிடம் அளிக்காவிட்டால் வெடிமலையாகி நெருப்பைக் கக்கிவிடும். அதற்கடுத்தும் கடலை வைக்காவிட்டால் முன்பு விழுங்கி, மீதிவைத்த இந்தத் தமிழகத்தை மீண்டும் விழுங்கிவிடும். மூன்றாவதாகக்கூட வைக்கவிட்டால் வானம் மழைபெய்யாது, பெய்தாலும் பேய் மழையாக—சூறாவளியாக வந்து துன்புறுத்தும், நிலம் ஒன்றுதான் பொறுமையின் சின்னம். எனவே,

"அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல" என்று வள்ளுவரும் குறள் செய்தார். ஆகவே மலையை முதலிலும், கடலை இரண்டாவதாகவும், வானத்தை மூன்றாவதாகவும் வைத்து இறுதியாக நிலத்தை வைத்தாரோ? வைப்பு முறையிலும் இலக்கிய நயத்தைக் கையாளுகின்றார்!

முடிவுரை :

பாரதியாரைப்போல இவர் கவிதையிலும் உரைநடையிலும் சிறுகதைகளிலும் சிறந்து நிற்பதோடு நாடகம் சிலவற்றையும் எழுதி, இயல் இசை நாடகமென்னும் முத்தமிழிலும் வித்தகராக விளங்குகின்றார். அவரது கவிதைகளுக்கு விளக்கஉரை தேவையில்லை—முகப்பூச்சு தேவையில்லை. அவை என்றும் மணம் கமழும் அன்றலர்ந்த மலர்கள். அந்தக் கவிதைப் பூங்காவிலே நுழைந்து.

எத்தனைதான் படித்தாலும் சலிப்பேறாது!
எடுத்தெடுத்துக் சொன்னாலும் சுவை தீராது!
அத்தனையும் நம்மக்கள் அறிவுக் கெல்லை!
அணுவளவும் வெறும் காதை இலவே இல்லை!
அழகு மொழி—இழை கருத்து—தெளிவாய்ச் சொன்னார்!
அதனாலே அவர் கவிஞர். அரசர் ஆனார்!

# காலத்தை அளந்தான்

பழஅருவி. பழநியப்பன், பி.எஸ்சி.

தமிழைப் புரக்க தமிழ்த்தேய் வமேநீ
உமிழும் தமிழின்ப ஊற்று—மமிழ்தைப்
புவியுண்ண வைக்கும் புதிரை புகழை
கவிகண்ண தாசனைக் கா

காரைநகர் கோப்புடையாள் அன்ப னைப்பில்
காலத்தி லோப்படைத்த தாயா ரின்நற்
பேரையவன் காப்பதற்கே எண்ணங் கோண்டு
பீடமேறி யமர்ந்துகோண்டான்; தேன்பா வென்ற
தேரையவன் செலுத்துகின்றான்; தாயா ருள்ளம்
சீலமகன் சிறப்புக்கண்டு இன்னும் துள்ளும்;
பாரையவன் ஆளுகின்றான் பார்க்கின் றேமே!
பாவாலே நன்றிசோல்வோம் 'ஐயா, நன்றி!'

'கம்பனைநான் காணவில்லை' என்பார்க் கேநாம்
காட்டிடுவோம் காட்டிடுவோம் இந்நாள் வேந்தை
நம்பார தியைப்பாரா மாந்தர் முன்னே
நாட்டிடுவோம் நாட்டிடுவோம் இக்கூர் வாளை
செம்பல்ல, சேந்தங்கம் நம்மோ னென்றே
சேர்ந்தேநாம் செப்பிடுவோம் வையம் கேட்க
அம்பாளின் அரும்புதல்வன் யாரேன் றுல்நாம்
அழகாகத் தீட்டிடுவோம் ஓவி யத்தை!

கலைத்தேவி களிநடனம் செய்வா ளென்றே
காட்டிவிட்டான் காட்டிவிட்டான் கண்ண தாசன்
உலைத்தீபோல் ஊக்கமதைத் தன்பா வாலே
ஊட்டிவிட்டான் ஊட்டிவிட்டான் உண்ண வைத்தான்
மலைத்தேன்போல் மற்றவரைத் தன்பா லீர்த்து
மாட்டிவிட்டான் மாட்டிவிட்டான் பாட்டுக் குள்ளே
இலைத்தலுக்கு இடமில்லை என்று, தானே
ஈட்டிவிட்டான் ஈட்டிவிட்டான் நாட்டுக் குப்பேர்!

கண்ணசையும் கணப்பொழுதில் கற்கண் டேபோல்
கட்டுகட்டாய்க் கவியாலே கண்ணி கட்டி,
விண்ணதிர விளையாடி விஞ்சை செய்து,
வெட்டிவெட்டிக் கரும்புகளை வீசும் நல்ல
பெண்ணரசி பெருமையையும் மிஞ்சும் வண்ணம்
பெட்டிபெட்டி யாய்க்கவிசேர்த் தேதந் தான்நம்
கண்ணதாசக் கவியரசன்; இன்ற வன்பேர்
கட்டிக்காத் தாலதுநாம் செய்யும் தொண்டு!

பையையவன் நிரப்பவில்லை; உள்ளத் தில்நம்
பைந்தமிழை நிரப்பிவிட்டான்; கொள்ளு தற்குக்
கையையவன் நீட்டவில்லை; வள்ளல் கையால்
கவியுலகை நீட்டிவிட்டான்; எள்ளு மாறு
பொய்யையவன் சொல்லவில்லை; உள்ள தையே
புவியிலவன் சொல்லிவிட்டான்; ஆகா இந்த
ஐயைந்து ஆண்டிலவன் ஆண்டு கோடி
ஆயிரத்தை அளந்துவிட்டான்; என்ன வென்போம்!

அவனுக்கு வாமியேநீ சக்தி யூட்ட
அதைநாங்கள் அவன்பாட்டில் கண்டு துள்ள
அவனுக்கு வாணியேநீ வீணை மீட்ட
அதைநாங்கள் அவன்பாட்டில் கேட்டு ஆட
அவனுக்கு சீதேவி செல்வங் கூட்ட
அதைவிஞ்சும் அரும்பாட்டை நாங்கள் கொள்ள
எவனுக்கும் தலைதாழா ஏற்றம் கொண்டு
இப்பெருமான் என்றென்றும் வாழ்வா னாக!

மழைகூட ஒருநாளில் தேனாகலாம்
மண்கூட ஒருநாளில் பொன்னாகலம்
ஆனாலும் அவையாவும் நீயாகுமா?
அம்மா என்றழைக்கின்ற சேயாகுமா?

—கவியரசர்

# நாளும் வாழ்க

பனா. சண்முகம்

காவிரியின் நீரோட்டம் கவிதையோட்டம்
கற்பனையின் தேரோட்டம் கருத்திேனாட்டம்
பூவிரியும் மலர்த்தோட்டம் புதுமைக்கூட்டம்
பூத்துவரும் மணத்தோட்டம் புகழின்ஓட்டம்
நாவினிக்கும் சுவையோட்டம் நயங்கள்கூட்டும்
நற்கருத்தின் இழையோட்டம் சுவைகள்கூட்டும்
பாவிரிக்கும் பண்ணோட்டம் பயிலும்நாட்டம்
படித்துவக்கும் தமிழோட்டம் சிறப்பைக்கூட்டும்.

எண்ணத்தில் வருவதெல்லாம் எழுத்தில் வீழும்
இதயத்தில் பூட்டிளாக்கத் தாளே இல்லா
வண்ணத்தால் நினைவெல்லாம் வார்த்தை யாகி
வடிவெடுக்கும் கவிதைஎன உருவும் கொள்ளும்
தன்னெஞ்சம் சரிஎன்றே என்னுகின்ற
தத்துவத்தை எடுத்தியம்பத் தயக்கமில்லான்
வன்னெஞ்சம் இல்லாதான் அக்கருத்தே
வருநாளில் மாறுமெனில் மயக்கம் கொள்ளான்.

இருப்பு வைத்துக் கணக்கெழுதி எட்டைக்கூட்டி
இருப்புப்பெட்டிக்குள்ளிட் டெண்ணிக் கட்டும்
விருப்பறியான் இன்றளவும் சேர்த்த தெல்லாம்
வியன்புகழே, வருநிதியம் வந்தவாறே
புறப்பட்டு வெளியேறும், என்றும் மாறுப்
புன்னகையின் இன்முகமே நிலைத்திருக்கும்
சிறப்பதனால் அவனுமொரு அரசனேதான்
செம்பொருளோ கவிதையிலே தேங்கிநிற்கும்

தங்கமுடி புனைந்திருந்த அரசரெல்லாம்
தங்கள்முடி இழந்துவிட்ட இற்றைநாளில்
தங்கமுடி இவனுக்குக் கவிதையன்றோ
தமிழ்க் கவிஞருலகுக்குத் தலைவனுமால்
சிங்கமென மேடையிலே ஆர்த்திசைக்குஞ்
செந்தமிழாற் செவிகுளிரும் உளங்களிக்கும்
பொங்குமனம் உவகையுறும் தமிழுக்கேதான்
புத்துலகச் சிற்பியவன் தலைவனுவான்.

அள்ளிஅள்ளிக் கொடுத்திட்ட அரசர்போலே
அகமகிழத் தன்கரத்தால் வாரிவாரிக்
கொள்ளுகென வழங்குகின்ற கண்ணதாசன்
குரிசிலவன் நிறைமனத்தன் வானமீதில்
வெள்ளிவெள்ளியாய்த் தோன்றும் விண்மீன்கூட்டம்
மிகைசிறக்கப் பெருகிவரு வாழ்நாள்எல்லாம்
நல்லிதயம் நனிசிறக்க நாளும்வாழ்க
தற்றமிழர் இதயமெலாம் போற்ற வாழ்க.

(தங்கமுடி = தங்கத்தால் ஆனமுடி; என்றும் தங்கி இருக்கக்கூடிய முடி).

# கவியரசு கண்ணதாசனின் கவித்திறம்

வ. தேனப்பன் எம்.ஏ. இரண்டாம் ஆண்டு
தியாகராசர் கல்லூரி, மதுரை

**முன்னுரை :**

''பல்லுலகும் பலவுயிரும் படைத்தழித்துத் துடைக்கினுமோர். எல்லையறு பரம்பொருள் முன்னிருந்தபடி இருப்பதுபோல்,'' தமிழ்த் தாய். இன்னும் சீரிளமைத் திறத்துடனேயே வாழ்கின்ருள். இதற்குக் காரணம், சங்க இலக்கியமும், ஐம்பெருங் காப்பியங்களும் சிற்றிலக்கியங்களும், பாரதியாரின் குயிற்பாட்டும், பாரதிதாசனின் குடும்ப விளக்குமட்டுமல்ல தமிழ். 'உலகமெல்லாம் பரவும் வகை செய்தல் வேண்டும்' என்ற குறிக்கோளுடன் நமது கவியரசு கண்ணதாசன் எழுதிய கவிதைகளாலும் தமிழ்த்தாய், அகமும் முகமும் மலர்ந்து வளமானவாழ்வு வாழ்ருகின்ருள். கவியரசரின் கவிதைகளும், திரை இசைப் பாடல்களும், உரைநடைக் கவிதை களும் தமிழ்த் தாயின் நெற்றியில் திருநீராக அமைந்துள்ளன. அத்திருநீரினின்று வருகின்ற மணமும், அதன் குணமும், சொற் களால் அளந்து காட்டமுடியாத பெரும் சிறப்பினை உடையது.

**இலக்கிய இன்பம் :**

''இந்நாடு முற்றும் ஏங்கித் தவங்கிடந்து
பாடு பாடென்று பாதத்தைத் தாங்கிவர
மாகவிஞர் பொன்னுலகில் மன்னவனுய் வீற்றி''ருக்கும்

கவியரசு கண்ணதாசனின் கவிதைகளில் இலக்கிய இன்பம் செறிந்து காணப்படுகின்றன. அவற்றைக் கீழே கண்டு, சுவைப்போம்.

**உவமை நலம் :**

உப்புப் தருவது உணவுக்குச் சுவை. உவமை தருவதுதானே கவிதைக்குச் சுவை? மலரிலே மணம்போல மாபெரும் கவிஞர்கள் தமது பாடல்களில் உவமையை நன்கு அமைப்பர்.

மாதரார் புருவம்போலும் வளைவெல்லாம் கொண்ட மாடத்தை நோக்கி பாண்டிமாதேவி நடந்து சென்ருள். கார்மேகம்போன்ற கூந்தலையும் கயல்போன்ற கண்களையும், மான்போன்ற நடையையும் கண்ட கவிஞர், உவமையிலே, புதுமையான உத்தி ஒன்றையும் சேர்த்து,

''வானவர் கூந்தல் கண்டு, மண்ணிடை மனதை விட்டார்
மீனவர் விழியைக் கண்டு. மீனென வலையை விட்டார்
மானவள் நடையைக் கண்டு, மானிடர் கணையைத் தொட்டார்
தேனவள் நாணிச்சென்ற சிறப்பினிற் கவிதை தொட்டாள்''

என்று பாடுகின்ருர். மனிதர் உள்ளம், எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணிக்கொண்டே போவதைக் கண்டு, அதனுடைய தலைப்பைத் தேடிப் பார்க்கிருர். ஆசையென்பது வேரில்லாமல் படருகின்ற கொடியல்லவா? காணுது திகைத்த அவர், ''இடியாப்பம்போல உள்ளத்தைப் படைத்துவிட்டு அதன் தலைப்பைத் தேடுகிற

பொறுப்பை எங்களிடம் கொடுத்திருக்கிறுய்.'' என்றதொரு அழகான உவமையைத் தனது உரைநடைக் கவிதையான ''புஷ்ப மாலிகா''வில் கூறியுள்ளார்.

**வருணனை :**

கவிதையில் தாங்கள் உணர்த்தவிருக்கும் உண்மையை நன்கு மனதிலே நிறுத்த, வருணனையைக் கலந்து பாடுதல் கவிஞர்கள் மரபு. நமது கவிஞர். கண்ணெதிரே தோன்றிய காதலி, ஒருத்தியை வருணனை செய்கிருர். எப்படி? அப்போது அவள் பார்த்த பார்வையையும், அவளது முகத் தோற்றத்தையும், நாணி அவள் வந்ததையும், வண்ணத் திரைப்படமாக்கி, நம்முன் பணிவன்புடன் சமர்ப்பிக்கிருர்

''பன்னீர்ப் பூப் போன்ற பார்வையும் நெற்றிப்
பரப்பினிலே முத்தான வேர்வையும்
பின்னிவரும் நாணமெனும் போர்வையும் சுற்றிப்
பினனலிட்ட கூந்தலெனும் தோகையும் கொண்டு—இன்று
கண் ணெதிரே தோன்றினுள்.''

என்று, நெற்றிப் பரப்பினிலே அச்சத்தால் ஏற்பட்ட முத்தான வேர்வையைக்கூட விடாது வருணித்துள்ளார்.

**கற்பனை :**

இலங்கையை ஏன் இறைவன் சிறியதாகப் படைத்தான் தெரியுமா? கவிஞரின் கற்பனைகண் சொல்கின்ற கவிதையினைப் பாருங்கள்.

''நலமிகும் உலகை வைத்து, நதிமலை கடலும் வைத்த
தலைமகன் தன் படைப்பைத், தவறிலா திலங்கக் கண்டு
கலையுலகுள நாள் மட்டும், கண்ணே றில்லாமற் காக்க
இலையள விலங்கை செய்து, இயற்கைக்கு மச்சம் வைத்தான்''

உலகைக் கண்ணேறில்லாமற் காக்க, இயற்கை வைத்த மச்சமாம், இலங்கை. கற்பனைக் கண் காட்டும் காட்சிதான் என்னே!

**நயம் :**

காதலன் வருவான்; கள்சுவை தருவான் என்று வழிமீது விழி வைத்துக் காத்திருந்தாள் ஒரு மங்கை. காதலன் வந்தான். கன்னியோ பேசவில்லை. அவன், தன்னை என்னவெல்லாம் சொல்லிப் புகழப்போகிருனே? என்று அவனையே பார்த்திருந்தாள். வந்தவன்,

''கொடியவளே!'' என்ருன்.

மங்கை மயங்கினுள். பாவை பயந்ததை கண்ட பாவலன்,
''கண்கள் இரண்டில் கனைதொடுத்தாள்] கருநாகம் எனப் பின்னிவிட்டாள்
குறுநகை என்னுங் விஷம்கொடுத்தாள்; உயிர் கொண்டு விட்டாள்
கொடியவளே! பூங் கொடியவளே
கொவ்வைச் செவ்வாய்க் கினியவளே''என்று நயம்பட பாடினுன்.
நங்கை நாணமடைந்தாள். பின்னர், உள்ளம் கலந்தது போல் இருவர் உணர்வும் கலந்தன.

**சொற்சிலம்பம் :**

''பாடையில் உடல்வைத்துப் பன்னீர் தெளிப்பவர்
பலவகை மலர்போ டுவார்
பாடைக்குப் போகுமுன் பன்னீர் குடித்துநான்
பலர்வகை மலர் சூடுவேன்''

என்ற பாடலின் இரண்டாவது வரிகளில் வருகின்ற பன்னிருக்கும் மலருக்கும் வேறு பொருள்களைச் சிலேடை என்ற உத்தியால் மதுச்சாரத்தையும், மங்கையரையும் உணர்த்துகின்றார்.

"தாசியின் மார்பிலும் தவுல்கொண்ட தோளிலும்
தழும்புதான் மிச்சமாகும்
சன்யாசி பையிலும் சாவுண்ட மெய்யிலும்
சாம்பல்தான் மீதமாகும்"

என்ற வரிகளிலும் சிலேடையைக் கையில் வைத்துக் கொண்டு சொற்சிலம்பம் ஆடுவதை எல்லோரும் நன்கு அறியலாம்.

### வாழையடி வாழை :

கவியரசு கண்ணதாசனிடம் எத்தனை எத்தனையோ புதுமைகள் காணப்படினும், நமது பழம் புலவர்களையெல்லாம் அவரினுள்ளே காணமுடிகின்றது. வைரம் பழையதுதான். அதனினின்று வருகின்ற ஒளி புதுமையானது. காரணம் பல்வேறு பட்டைகள் தீட்டப்பெற்ற வைரக்கல் மிளிர்வதுபோல, பல்வேறு நூல்களை படித்த இவர் புதுமையாக ஒளிர்கின்றார். இவரது பாடல்களிலே சங்க இலக்கியமும், காப்பியக் கருத்துக்களும், ஆங்கிலக் கவிஞர் களின் கருத்துக்களும், பாரதி, வள்ளலார், பாரதிதாசன், கவிமணி ஆகியவர்களின் எண்ணப் பேழைகளும் மறுபிறப்பு எடுத்து வந்துள்ளன. அவற்றைப் பற்றி எழுதவேண்டுமானால் அதுவே ஒரு பெரும் கட்டுரையாக வடிவெடுக்கும் இதனால், வாழையடி வாழையென வந்த கவிக்கூட்ட மரபினில் தான் ஒருவன் என்பதை நிரூபிக்கின்றார். என்று சுருங்கச் சொல்லலாம்.

### முடிவுரை :

கடலின் உள்ளேதான் முத்தும் மணியும் கொட்டிக் கிடப்பதாய்க் கூறுவார்கள். ஆனால் நமது முத்தையா செட்டியாரின் பாடலின் உள்ளேயும் அவை கொட்டிக் கிடப்பதைக் காணலாம். கற்கண்டு, சீனி, கனியுந் கனிந்தொழுக, சொற்கொண்டு பாடுகின்ற இவரது கவித்திறன் அளப்பரியது. அளந்து காட்டும், நாளி பாவின் சுவை யைக் கூறவல்லதோ?

"ஒன்றுமட்டும் உண்மைஅறி
ஊற்றிலொரு பாட்டெழுதும்
செந்தமிழ் மாகவிக்கு மரணம்—அது
வந்தபின்பு தான்பெருமை ஜனனம்"

என்று கவியரசர் பாடியது பிற கவிஞர்களுக்குப் பொருந்தும், ஆனால் இவரோ வாழ்கின்ற நாட்களிலேயே பெருமையோடு வாழ்கின்றார். மரணம் வருமுன்னே பெருமை ஜனனமாகி விட்டது. இதுவும் இவரது கவித்திறனுக்குச் சான்று பகரும். கவிஞரே "இருந்து பாடிய இரங்கற்பா" என்ற ஒன்றை எழுதி நம்மை யெல்லாம் அழ வைத்துவிட்டார். எனினும் இறைவன், தமிழுக் காகவும், தமிழ் மக்களுக்காகவும், விவேகானந்தரையும், பாரதியையும், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தையும் விரைந்து அழைத்துகொண்டதுபோல் கவியரசரை அழைக்காதிருக்கவேண்டும் என்பதே என் விருப்பம். அவன் அழைக்காதிருக்கும்வரை, அவனி யெங்கும் கவிமழை பொழியும்; கவித்திறன் கண்டு கண்டு, நாம் களிபேருவகை அடையலாம்.

# வாழ்விக்க வாழியவே!

தேவகோட்டை மாணிக்கம்

வருபுகழால் மயக்கமில்லை எதிர்ப்புகளால் தயக்கமில்லை
என்றுதினம் ஏடெடுத்துக்கவிபாடிச்
சேறுபகை சீரழியத் தன்னந்தனிமையிலே
தான்மட்டும் போரிட்டுப் பெருநற்பயனை
உறவோடு சுற்றம் உலகெலாம் உய்ய
உவந்தளிக்கும் உயர்வள்ளலே! நின்
பெருமைபெருகக் கண்டுமனம் பொறாத
மாற்றார்என்ன மரமோ கல்லோ!

தவறுளார் குறையெலாம் தாங்களே நிறுத்து
நிறையோடு நேராய்நினைத்திட அரிதாய்ப்பகட்டித்திரியும்
பாவியார்தம்மிடை பகலவன்போல வாழும்வகையில்
பாசம்பரிவு பண்போடுதுணிவு அனைத்தும் கொண்டு
புவியோர் அணிபெறவாழ்வெனும் கடலில்தினமும் மூழ்கி
தத்துவமாம் முத்தெடுக்கும் மெஞ்ஞானியே! வாய்மைக்
கோவிலுக்கோர் நெய்விளக்கு, தீபமெனத்திகழ்கின்ற
கவியரசே! தாய்த்தமிழை வாழ்விக்க வாழியவே!

சாதாரண மனிதன் தெருவில் நின்று
எல்லோரையும் பார்க்கிறான்
புகழ்பெற்ற மனிதனைத் தெருவில்
நிற்பவர்கள் எல்லோரும் பார்க்கிறார்கள்

—கவியரசர்

# “உணர்ச்சிக் கவிஞன்”

பி. சித. பி. சிதம்பரம்

வேலையின்றி, வழியுமின்றி
ஊரை ஊரைச் சுற்றிவிட்டு
கவித் தொழிலைக் கைப்பிடித்தான் கண்ணன்
இன்று கலைத்தொழிலில் அவனும் ஒருமன்னன்
காதலென்றும், காமமென்றும்,
சோகமென்றும், பாபமென்றும்
சுவை பலவே அனுபவித்தான் வாழ்வில்,
அதை அவையிடையே பிரசுரித்தான் பாவில்,
இன்றொருவர் நாளையொருவர்
என்றே பல தலைவர்களை
பின்தொடர்ந்து சென்றிடுவான் தொழுதே!
பின்னர் உள்ளமதைக் கொட்டிடுவான் அழுதே.
பாட்டுமுண்டு, பேச்சுமுண்டு
பட்டிமன்றம் தானுமுண்டு, நீதந்த
சட்டி சுட்ட பாட்டு முண்டு
எட்டி நில்லேன் அரசியலில் என்றால்
“விட்டு விடு நானடிமை
செட்டிமகன் உணர்ச்சிக்கே” என்பான்
காதலுண்டு போகமுண்டு
கவிதை யவள் பெண்ணிடத்தில்
விரக்தியுண்டு, துறவுமுண்டு
பெற்றுவிட்ட தத்துவத்தில்
பாசமுண்டு, நேசமுண்டு
பிறந்துவிட்ட மண்ணிடத்தில்
உணர்ச்சிகள் அனைத்தும் உண்டு
உண்மை யிப்பெருங் கவிஞன்
உலகில் என்றும் வாழுதற்கு
உரம் தனைப் போட்டுவிட்டான்
உத்தரவு வாங்கி விட்டான்.

# கட்டியங் கூறினன்

திலகவதி அண்ணாமலை
கொத்தமங்கலம்

கண்ண தாசன் கவிஞர்க் கரசன்
எண்ணருங் கருத்தினை எளிய நடையில்
வண்ணத் தமிழில் மண்ணகம் மகிழ
பண்ணிறை பாக்களால் பாட வல்லான்.

ஆற்றின் வெள்ளம் அணைகடந் தன்ன
போற்றும் பாக்கள் புறப்படும் நாவில்.
ஊற்றெனப் பெருகும் உன்னதத் தத்துவம்
காற்றென விரையும் கற்பனைத் திறனே.

நற்றவர் விரும்பும் நல்லன நாடி
தெற்றெனத் தெரியும் சிந்தனை தேடி
கொற்றவ னிவனெக் கூறிடப் பாடி
நற்றமிழ் கவிதை நவிலுவான் கோடி.

கற்றவர் வியப்பர் கவிஞர் போற்றுவர்
உற்றவர் உவப்பர். மற்றவர் மகிழ்வர்
செற்றவர் தாமும் சினந்தனை நீக்கி
மற்றது கேட்டு மறப்பர் தன்னிலை.

பட்டினத் தடிகள் தத்துவந் தன்னை
சுட்டிய பின்னர் சொல்பவர் இலையென
செட்டி மரபு செயலறுங் காலை
கட்டியங் கூறினன் கண்ண தாசன்.

---

கடுகுக்குள்ளே காரத்தை ஏற்றியதுபோல கையளவு மனத்துக்குள்ளே எவ்வளவோ சிந்தனைகளை இறைவா நீ உற்பத்தி செய்கிறாய்.

—கவியரசர்

# கவிக்குலத்து வேந்தே!

கா. அண்ணுமலை

கன்னித் தமிழ் மொழியின்
கையில் கொலுவீற் றிருக்கும்
கன்னித் தமிழ் மகனே!
காவியத் தலை மகனே!
பின்னித் தமிழ்க் கவிதை
பல புரியும் பாமரரை
மன்னித் தருள் புரியும்
மாவீர நீ வாழ்க!

அருவி போல் வீழும்
அழகான தமிழி ஞேசை
மருவிப் பாய்ந் தோடும்
மங்காத குரலி ஞேசை
கருவி காரியம் காட்டும்
கவிஞரே உமது பாடல்,
துருவித் துருவிப் பாடும்
தூயவா நீ வாழ்க!

பள்ளி செல்லா தோரும்
படித்து அறியா தோரும்
எள்ளி நகைத் தோரும்
ஏசிப் பிழைத் தோரும்
துள்ளி மகிழும் வண்ணம்
துதித்துப் போற்றும் வண்ணம்
வெள்ளி விழாக் கொண்டாடும்
வேந்தே நீ வாழ்க!

# கவிஞர் கண்ணதாசன் அவர்கள் எழுதிய கவிதைகளில் செட்டிநாட்டுச் சொற்கள் அடங்கிய சில கவிதைகள்

S. சுப்பையா, பாங்க் ஆப் மதுரை, சேலம்

---

படம்: தாயில்லாப்பிள்ளை

“சின்ன சின்ன ஊரணியாம்
தேன் மணக்கும் சோலைகளாம்
ஊரணியின் கரையில்
ஓங்கி நிற்கும் மாமரமாம்”

படம்: பாதகாணிக்கை

“அத்தை மகனே போய் வரவா
அம்மான் மகனே போய் வரவா”

படம்: காலம் வெல்லும்

“எம்பிள்ளை மாப்பிளையின்னு
எழு லட்சம் சீதனம்
மோட்டாரு காரு ரேண்டுவாங்கித் தரணும்
வைர மோதிரமும் சங்கிலியும் பண்ணித்தரணும்

படம்: பட்டிக்காடா பட்டணமா

“சின்னாளப்பட்டி கண்டாங்கி எடுத்து
என் கையாலே கட்டி விடவா”

மலர்களைத் தொடுப்பவன் கைமணக்கிறது.
வாசனைத் திரவியங்களைப் பூசிவிட்டவன்
கைகளிலே பாதி தங்கிவிடுகிறது.
இறைக்கிற கேணி சுரக்கிறது.

—கவியரசர்

# எங்கள் கவியரசு

C. செல்வன்

கண்ணனுக்கு தாசன் அவன்
கவிஞர்க்கு அரசன் அவன்
கல்விக்கு அகத்தியன் அவன்
கவிதைக்கு மன்னன் அவன்
சொல்லுக்கு வீரன் அவன்
சொர்க்கத்தின் வாசல் அவன்
குழந்தை உள்ளம் அவன்
குன்றிலிட்ட விளக்கு அவன்
இந்நாளில் கம்பன் அவன்
எந்நாளும் கவிதை அவன்
பாரதிக்கு பக்கத்தில் அவன்
பாரதத்தின் பக்கத்தில் அவன்
பாட்டுக்கல்வியின் இராஜ்ஜியம் அவன்
வரலாற்றில் கவிஞன் அவன்
வாழ்க்கைக்கு வழிஞன் அவன்
வாழ்ய கவிஞன் என்று
வாழ்த்த வந்தேன் இன்று.

குணங்கெட்ட நண்பனைவிட தூய
பகைவன் உயர்ந்தவன்.
நஞ்சு கொன்றுவிடும் என்று நமக்குத் தெரியும்.
அமுதுநன் சாவது நம்மை அறியாமலே நடந்துவிடும்.
—கவியரசர்




காலங்கடந்த காலமாகவே நன்மையும் தீமையும் உலக நாயகியின் இரு கரங்களாகவே விளங்கி வந்திருக்கின்றன.

புயல் இல்லையென்ருல் தென்றலின் சுகம் தெரியாது என்றே ஆண்டவன் புயலையும் படைத்திருக்கின்ருன்.

உணவின் சிறப்பிற்கு அறுசுவைகளை மனிதன் அறிந்து கொண்டதுபோல உயிர்களின் சுவைக்கு முக்கியமாக மனித குலத்தின் சுவைக்கு ஆண்டவன் இன்ப துன்பங்களை அறிவை அறியாமையை அன்பை—வம்பைப் படைத்திருக்கிருன்.

ஆனல் ஒரு வேறுபாடு, நல்லவர்கள் தீயவர்களைத் திருத்துவதில் மகிழ்ச்சிகொள்கிருர்கள். ஆனல் தீயவர்கள் நல்லவர்களை அழிப்பதில்தான் மகிழ்ச்சி கொள்கிருர்கள்

முடிந்தால் அன்பு செலுத்தி இல்லாமல் இருந்தால் தாம் உண்டு தம் வேலை உண்டு என்றிருக்கும் இராம நாதன் செட்டியார்—சீதை ஆச்சி பற்றிக் குறை கூறிய வர்களுக்குத்தான் அதில் எவ்வளவு மகிழ்ச்சி!

ராமாயி ஆச்சியின் தீர்ப்பு எப்படியிருக்கும் என்பது வாசகர்கள் அறிந்ததே, ஏனென்ருல் அருணுசல ஐயாவால் அவர்கள் போக்கில் பெரு மாற்றம் நேர்ந்துவிட்டதல்லவா?

எனவே காந்திமதி ஆச்சியைப் பார்த்து "ஒந்தங்கச்சியைப் பத்தி அவன் பேசலாம்" என்று அழுத்தந் திருத்தமாகக் கூறிஞர்கள்.

அதைக் கேட்டு காந்திமதி ஆச்சி உள்ளம் கொதித்தார்கள்.

''என்ன ஆச்சி ஒங்க நாயம் வயசானவு கண்ணு நாயம்கேட்டா கூறுகெட்டதனமாச் சொல்லுறிகளே! ''என்று காந்திமதி ஆச்சி சீறினுர்கள்.

ராமாயி ஆச்சி தமக்கு வந்த கோபத்தை அடக்கிக் கொண்டார்கள்.

இந்தாப்பாரு காந்திமதி உந்தங்கச்சி விசயம் ஊருக்கெல்லாம் தெரியாட்டியும் எங்களைப்போல நாலு பேருக்குத் தெரியும்—அதை நாங்க சொன்னு நல்லா இருக்குமா? வீட்டுக்கு வீடு வாசப்படி. அது சின்னம் பெரிசா இருக்கும் அவ்வளவுதான் வித்தியாசம். நாம மத்தவுகளைப்பத்தி பேசினு அவுக நம்பளைப் பத்தி பேசுவாகளேன்னு நினைக்கோணும்.'' என்று ராமாயி ஆச்சி கூறிவரும்போதே காந்திமதி ஆச்சி இடை மறித்து; என்ன ஆச்சி என்னமோதான் ரொம்ப உப தேசம் பண்றே நீயும் இந்தா இருக்காளே ஓம் மருமக ரெண்டுபேரும் அடிச்சுக்கிட்டு நாறுனது எனக்குத் தெரியாதா? என்று சீறினுர்கள்.

உனக்குத்தெரியாதுன்னு எங்கப்பத்தா சொல்லலே வீட்டுக்கு வீடு வாசப் படின்னு அவுகளேதான் சொல் விட்டாகளே. நீதான் வாசற்படி இல்லாமே தாவுற மாதிரி பேசுறே—என்று சிங்காரம் காந்திமதி ஆச்சி தங்கச்சியின் ஒழுக்கக் குறைவான கதையை கூறத் தொடங்கினுன்.

சிங்காரம் நீவாடாசாமி கும்புட, செய்தார்வினை செய்தாரோடே. அவ என்ன வேண்ணுலும் பேசிட்டுப் போரு அதுக்காக நாம சொல்லைக் கொட்டிறப்புடாது. அவ தங்கச்சி இப்ப நல்லா வாழ்ந்துவிட்டிருக்கா அதை நாம கெடுத்திறப்படாது.'' என்று கூறிய ராமாயி ஆச்சி அங்கிருந்து கோயிலுக்குள் நடந்தார்கள் சிங்காரம் அவர்களைப் பின் தொடர்ந்தான். இந்த நிலையில் இராதநாதன் செட்டியார் வீட்டு சமயற்காரக் கருப்பையா தலைவிரி கோலமாக அங்கே ஓடி வந்தான்.

கூடத்திலிருந்தவர்களைப் பார்த்து பெரியாச்சி வந்தாங்களா? பெரியாச்சி வந்தாங்களா? என்று பதட்டத்தோடு கேட்டான்.

கோயிலுக்குள் போன ராமாசி ஆச்சி அவன் குரலைக் கேட்டு பதறியபடியே வெளியே வந்தார்கள். சிங்காரம் ஓடி வந்தான்.

கருப்பையாவின் நிலைகண்டு அவர்கள் கலக்க மடைந்தார்கள்.

என்னடா கருப்பையா? என்று ராமாயி ஆச்சி கேட்டார்கள்.

“மே வீட்டிலே இருந்து செட்டியாரு மயங்கி விழுந்துட்டாங்க. பேச்சுமூச்சில்லாமக் கிடக்கிறுங்க” என்று அழுதபடியே அவன் கூறினுன்.

யாரு ராமையாவா? என்று கேட்ட ராமாயி ஆச்சி கையிலிருந்த அர்ச்சனைத் தட்டை, தம்மை மறந்த நிலையில் அப்படியே விட்டு விட்டு முருகா! முருகா அட பழநி ஆண்டவா? என்று ஏதேதோ முனங்கிய படியே ஓட்டமும் நடையுமாக இராமநாதன் செட்டியார் வீட்டை நோக்கி விரைந்தார்கள்.

வயதான அவர்களை தனியாக வரும்படியாக விட்டுச்செல்ல மனமில்லாத சிங்காரம் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றுன்.

கொமுந்தனுர் மகன் இராமநாதன் செட்டியார் வீட்டை அடைவதற்கு முன்னர் ராமாயி ஆச்சியின் மன கடலில் ஆயிரம் எண்ண அலைகள் முட்டி மோதின.

ராமநாதன் செட்டியாரின் நிலை என்ன ஆகுமோ என்று அவர்கள் பதறியதில் வியப்பில்லை ஏனெனில் எப்பொழுதுமே செட்டியார் அவர்களை பச்சைப் பிள்ளையைப்போல—

ராமாயி ஆச்சியும் சிங்காரமும் வீட்டை அடைந்த போது வ்ளவு பத்தியில் ராமநாதன் செட்டியார் படுக்க வைக்கப்பட்டிருந்தார்கள். அவர்கள் அருகே சீதை ஆச்சி கண்ணீர் மாலைமாலையாக கொட்டச் செயலற்று இருந்தார்கள்.

இராமநாதன் செட்டியார் படுக்கையில் கிடந்த நிலை அவர்கள் உயிரோடு இருக்கிறுர்களா என்ற ஐயத்தையே ராமாயி ஆச்சிக்கு உண்டாயிற்று.

அவர்களைக் கண்டதும் துக்கம் பீறிட்ட நிலையில் “அத்தே” என்று சீதை ஆச்சி பீறிட்டுவந்த அழுகையை அடக்கிக்கொண்டு கூறினுர்கள்

தங்கத்துக்குத் தங்கம்
தனித்தங்க மானவனே.
பேசாமே கிடக்கிறியே
பேதைமனம் துடிக்குதையா
சீதைமகள் அழுகிறதை—என்
செல்லமகன் பார்க்கலையா

என்று புலம்பியபடியே இராமையா செட்டியார் அருகில் ராமாயி ஆச்சி ஓடி உட்கார்ந்தார்கள்.

அப்பத்தா, நீங்களே இப்படிப் புலம்பிறு ஆச்சிக்கு யாரு ஆதரவு? என்று ராமாயி ஆச்சியைக் கடிந்து கொண்ட சிங்காரம். சமையற் காரனைப் பார்த்து, ஏண்டா, கருப்பையா டாக்டரைக் கூட்டஆளுப் போயிருச்சா இல்லையா என்று கேட்டான்.

அப்பதையே கண்ணாயிரம் காரை எடுத்துக் கிட்டுப் போயிட்டான். என்று கருப்பையா கூறினன்.

தைரியமா இரு சீதை... ராமையாவுக்கு ஒண்ணும் வந்திராது. நம்ம பெரிய கோயில் சாமி விட்டுடாது. என்று கூறிய ராமாயி ஆச்சி சாமி கும்பிடும் அறைக் குப்போய் கொஞ்சம் விபூதியை எடுத்து வந்து ராம நாதன் செட்டியார் நெற்றியில் வைத்தார்கள்.

தம் கணவருக்கு என்னவும் ஆகிவிடுமோ என்று எண்ணவே சக்தியற்றவர்களாகச் சீதை ஆச்சி மயங் கிய நிலையிலே காணப்பட்டார்கள்.

எல்லோருமே டாக்டர் எப்பொழுது வருவார் என்று எதிர்பார்த்த வண்ணமிருந்தார்கள்.

இதற்கிடையில் அக்கம்பக்கத்து வீட்டில் உள்ள வர்கள் எல்லாம் அங்கு வந்து சேர்ந்தார்கள்.

டாக்டர் ரத்தினசாமி இராமநாதன் செட்டியாரிடம் பேரன்புகொண்டவர்; நல்ல குடும்ப நண்பர். எனவே செட்டியார் மயக்கமாக விழுந்துவிட்டார்கள் என்பதைக் கண்ணாயிரம் சொல்லக் கேட்டதுமே வேதனை அடைந்தார்கள்—விரைந்து வந்தார்கள்.

கார் வந்து வீட்டின்முன் நின்றது. டாக்டர் வருகிறார் என்பதை அறிந்ததுமே அங்கு இருந்தவர்கள் எல்லோருமே பரபரப்படைந்தார்கள்.

இராமநாதன் செட்டியார் படுத்திருந்த இடத் தைச் சுற்றி வளைத்துக்கொண்டிருந்த கூட்டத் திற்கு அருகில் வந்ததும்—நானும் முப்பது வருஷமாச் செட்டி நாட்டிலே இருக்கேன். இப்படித்தான் உடம் புக்கு முடியாதவங்களை வளைச்சு நிண்ணுகிறிங்க, நோயாளிக்குக் காத்துவர வேண்டாமா? என்று டாக்டர் கடிந்து கொண்டார்.

ஆமாத்தா தள்ளி நில்லுங்க என்று ராமாயி ஆச்சி கடுமையாகச் சொன்னதும் கூடியிருந்தவர்கள் கலைந்தார்கள்.

டாக்டர் ஆரஅமர இராமநாதன் செட்டியாரைப் பரிசோதித்துப் பார்த்தார்.

சீதை ஆச்சி, ராமாயி ஆச்சி சிங்காரம்—கருப்பையா எல்லாரும் அவர் முகத்தையே கவனித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

டாக்டர் முகத்தில் தெளிவற்ற தன்மையே காணப் பட்டது.

"என்ன டாக்டரையா எப்படியிருக்கு?" என்று ஆவலோடு ராமாயி ஆச்சி கேட்டார்கள்.

"கவலைப்படுபடியாக ஒன்னுமில்லை" என்று கூறிய டாக்டர். ஊசி ஒன்றைப் போட்டுவிட்டு, இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு கொடுக்குமாறு சில மாத்திரைகளைக் கொடுத்தார்.

"பயமொண்ணுமில்லையே" என்று சீதை ஆச்சி விம்மியபடியே கேட்டார்கள்.

"டாக்டருங்கிறவன் நோய்ங்கிற எதிரியோடே போராடுகிறவன்தான். ஆனால் அதிலே வெற்றி பெற வேணுங்கிற முடிவு ஆண்டவன் கையிலே இருக்கு. தெய்வத்துக்கு நம்ம செட்டயார் மேலே கோவமிருக்கிறதுக்கு நியாடமில்லே. நான் நம்ம செட்டியாரோடே பிறக்கலையே தவிர, சொந்த சகோரன் மாதிரி. அப்படியிருக்க பயமென்ன? நீங்க தைரியமா இருங்க" என்று டாக்டர் கூறிவிட்டு எந்த நேரமானலும் பரவாயில்லை. கண்ணுயிரத்தை அனுப்புங்க உடனே வர்றேன்" என்று சொல்லிவிட்டுப் புறப் பட்டார்.

டாக்டர் ஏதோ சுற்றிவளைத்துப் பேசுவதுபோல ராமாயி ஆச்சிக்குத் தோன்றியது.

எனவே டாக்டரை வழியனுப்பப் போவதுபோல வெளியே சென்றவர்கள் அருணசல ஐயாவையும் கல்யாணியையும் கையோடு கூட்டி வந்து விடுமாறு கண்ணுயிரத்திடம் கூறி அனுப்பினர்கள். சிங்காரத்தை அழைத்து "உடனே வருமாறு வேலாயுதத்திற்கு போன் போட்டுச் சொல்லிவிடுமாறு கூறினர்கள்.

ராமநாதன் செட்டியார் கண்கள் மெல்லத் திறந்தன. அவர்கள் பார்வை எப்படியோ இருந்ததால் 'பெரும் கலவரத்திற்காளான சீதை ஆச்சி "அயித்தை இங்கே வாங்களே" என்று ராமாயி ஆச்சியை அழைத்தார்கள்.

அவர்கள் பரபரப்போடு உள்ளே ஓடி வந்தார்கள்.

(தொடரும்)

# காலவெள்ளம் நீந்திவரும் கவி!

வண்ணமலர் மணம்பரப்பும்; தேனும் நல்கும்
　　வான்முகிலோ மழைபொழியும்; குளிர்ச்சி யூட்டும்
உண்ணுமுண வுயிர்காக்கும்; சுவையும் சேர்க்கும்
　　ஊதியத்தைத் தரும்பொருளோ வாழ்வை யாக்கும்
விண்ணொளியைத் தருங்கதிரோ விடிவுண் டாக்கும்
　　வெற்றிதரும் அணிவகுப்பே உரிமை காக்கும்
கண்ணதா சன்கவிதை படிப்போர்க் கெல்லாம்
　　கள்ளின்வெறி துள்ளிவரும்; இன்பங் கூட்டும்!

தங்கத்தில் வயிரத்தைப் பதித்து வைத்தால்
　　தகதகக்கும் ஒளிபிறக்கும்; அழகுண் டாகும்!
வங்கத்தின் அலையுடனே அலைபு ரண்டால்
　　வயிரத்தை ஒத்தவெழில் நுரைபி றக்கும்!
அங்கத்தில் அங்கத்தை ஒன்று சேர்த்தால்
　　அற்புதமாம் புத்தின்பச் சுவைபி றக்கும்!
சங்கத்துத் தமிழோடு கண்ண தாசன்
　　தத்துவங்கள் ஒத்துநவ வித்தை காட்டும்!

பாய்ந்துவரும் தேனருவி இசையும் இன்பம்;
　　பதுமமலர் பூத்தகுளத் தமைதி இன்பம்;
சாய்ந்துவரும் கதிர்பரப்பும் ஒளியும் இன்பம்;
　　தனியிருட்டை விலக்கிவரும் நிலவும் இன்பம்;
ஆய்ந்துவரும் பழம்பாட்டின் பொருளும் இன்பம்;
　　அடுக்கடுக்காய்த் தோன்றுபுதுக் கவியும் இன்பம்;
நீந்திவரும் காலவெள்ளம் கண்ண தாசன்
　　நிகழ்த்துகின்ற பாட்டெல்லாம் இன்பம்! இன்பம்!

— நாரா நாச்சியப்பன்

# கண்ணனுக்குத் தாசன்
# அவன்
# கம்பனுக்கு மூத்த மகன்

எழுத்துலக வேந்தர்கள் மணி முடிகளை உருவாக்குவோர்கள் அவர் தம்முள்ளும் ஆற்றல் மிக்க கவிஞரே தமிழ் இலக்கிய வளத்தை இறவாப் புகழுடையதாக ஆக்க முடியும் என்பது மகாகவி பாரதியாரின் கருத்து. பாரதி தோற்றுவித்த கவிதை ஊற்றினை வற்றுமல் வளம்பெறச் செய்யும் சீரிய பணிக்கெனத் தன்னையே அளித்த கண்ணதாசனைச் சிறப்பித்தல் (அவர் தம் வெள்ளி விழா ஆண்டில்) மிகவும் ஏற்புடைத்து.

''காலையிலே குளித்தெழுந்து
கருஞ்சாந்துப் பொட்டுமிட்டு
கருநாகப் பாம்பெனவே
கார்கூந்தல் பின்னலிட்டுக்
காத்திருந்தேன் உம்வரவைக்
கடைக்கண்ணுல்
பார்த்திருந்தேன்''

என்ற அவர்தம் முதற்பாடலே அவருக்குப் புகழ் மாலை சூட்டுவித்தது.

கண்ணனுக்கு தாசனவன் கம்பனுக்கு மூத்த மகன் எனப் பாடு புகழ்பெற்ற அவர் தம் கவிதைக வருவதை வந்தது போலச் சொல்லி வாழ்விற்குப் புது வழி வகுப்பன. நாம் நாடும் இன்பங்கள் பலவற்றையும் ஊட்டி விடுகின்றன. பழையன கழித்துப் புதியன புகுத்தி வாழ்விற்குப் புத்துயிரளிப்பன. வருங்காலத்தை நெடுந்தூரம் வகுத்துக் காட்டி உயிரோங்க நலம் செய்வன. வெள்ளத்தின் பெருக்கைப்போல் கலைப் பெருக்கும், கவிப்பெருக்கும் மேவச் செய்து பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம் பதவி பெற்று மேலோங்கச் செய்வன.

கவிஞர்கள் என்றுலே ''கல்லைத் தான் மண்ணைத்தான் காய்ச்சித் தான் குடிக்கத்தான் கற்பித்தானு'' எனும் மொழிதான் முதலில் நம் நினைவிற்கு வரும். புலவர் நிலை கண்ட புரவலன், அப்புலவர் நிலை உணர்ந்து பொருளீந்தது அன்று. ஆனுல் இன்றே புலவர்கள், ''வெந்ததை உண்டு விதிவந்தால் சாவோம்'' என்ற நிலையுற்றோருக்குப் பொருளீந்து மகிழ்கின்றனர். இவர்கட்கெல்லாம் வழி காட்டியாய் நின்று ஒளிகாட்டுபவர் நம் கண்ணதாசனே.

நம் சமூகத்தினரின் மூட நம்பிக்கைகளாலும், வீண் பிடிவாதத்

தாலும், பொருளாசையாலும் தடையுண்டு நின்ற எத்துணை எத்துணையோ திருமணங்களை நடாத்தி மணமக்களின் வாழ்வில் ஒளியேற்றி அவர்களைப் பல்லாண்டு, பலகோடி நூற்றுண்டு வாழ்க என வாழ்த்தி மகிழும் அவர்தம் அருள் நெஞ்சை எண்ணித்தான்,

'வறியார்க்கொன்றீவதே ஈகை
மற்றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து''

எனும் குறள் எழுதப்பட்டதோ என வியக்கத் தோன்றுகிறது.

அறனிழுக்காது அல்லவை நீக்கி மறன் இழுக்கா மானம் உடைய அரசியலில், கட்சிகள் மாறினும் கொள்கைகள் மாறினும் தான் மட்டும் மாருதிருக்கும் அவர்தம் அரசியற் கருத்துக்கள் நம் தலைமுறையினர் மட்டுமின்றி, வேறு பலரும் போற்றுமளவில் இலங்குகின்றன.

சிங்கத் தமிழர் வாழ்ந்த சங்க காலத்தில் மட்டுமின்றித் தங்கத் தமிழர் என மங்காப் புகழ்பெறும் இக்காலத்திலும் கவிஞர் கண்ணதாசன் போன்ற ஓர் கவிஞரைக் (நகரத்தார் சமூகத்தில்) காண்டலரிது. சிந்தித்துச் சிந்தித்துச் சிவந்த இன்மனம் கொண்ட கண்ணதாசன் எனும் புனைபெயரில் பார்போற்ற வாழும், திரு. முத்தையா செட்டியாரவர்கள் எக்கண்ணேட்டத்திலும் தலைசிறந்து விளங்கும் பான்மையை எக்காலத்திலும் பெற்று வாழ நகரத்தார் சமூகம் வாழ்த்துகிறது.

''இல்லத்தில் தமிழ் மணக்க
இன்சொல்லே நாமணக்க
உள்ளத்தில் ஒளிச்சுடராய்
உயர்விற்கு நல்மணியாய்

அள்ளற்கும் குறையாத
அன்பிற்குப் பிறப்பிடமாய்''.

அறிவுக்குப் பேரறிஞர் அமைச்சர் நம் அண்ணுவின் உள்ளத்தில் ஒருபோதும் மாருமல் ஒளிவீசும் கண்ணதாசன், பல்லோரைச் சமைத்துப் பாரில் இந்தப் பல்லோரும் உன் படைப்பில் பெருமை செய்வோம்; நல்லோரும் போற்றும் உயர் கூற்றின் இன்ப நலமெல்லாம் பெருகிட நாம் சபதம் செய்வோம் என நம்சமூகம் உறுதி கொள்ள வேண்டும்.

''வாழ்ந்தவனைப் பாராட்டி
வீழ்ந்த நாடும் இல்லை
வீழ்ந்தவனைப் பாராட்டி
உயர்ந்த நாடும் இல்லை''.

என்பார்கள் ஆன்ருேர்கள். இருப்பினும் தமிழகத்தில் தன்னிகரற்றுத் தலைசிறந்து விளங்கும் நம் கவிஞர் கண்ணதாசன் நகரத்தார் சமூகத்தில் தோன்றியது நம் இனத்தவரைப் புகழ்வானின் உச்சிக்கே அழைத்துச் சென்ற கவிஞர் கண்ணதாசனை அவர்தம் வெள்ளி விழா ஆண்டில் வாழ்த்துவதோடன்றி என் பாராட்டுக்களையும் அளித்துள்ளேன்.

# கவிஞரின் வெள்ளி விழா

—லெனின்—

காலை குளித்தெழுந்து
கருஞ் சாந்துப் பொட்டுமிட்டு
கருநாகப் பாம்பெனவே
கார்கூந்தல் பின்னலிட்டு...''

—எனத் தொடங்கும் கவிஞர் கண்ணதாசனின் முதற் கவிக்கு இருபத்தேழு வயதாகிறது.

1944-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் ராயவரத்திலிருந்து வெளிவந்த திருமகள்' என்ற இதழில், இக்கவிதை பிரசுரமாயிற்று. இதே வயதுதான் அவருடைய உரைநடைக்கும்.

''கலங்காதிரு மனமே—உன்
கனவெலாம் நனவாகும் ஒருதினமே!''

—எனத் தொடங்கும் கவிஞரின் முதற் திரைப்படப் பாடலுக்கு இருபத்தைந்து வயதாகிறது.

1947-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 'கன்னியின் காதலி' என்ற படத்துக்காக எழுதப்பட்டதாகும், இப்பாடல்.

இலக்கியத் துறையில் கவிஞர் தொட்டதிலெல்லாம் வெற்றியே கண்டிருக்கிறார்.

கவிதையென்று மட்டுமல்லாது நாவல், சிறுகதை, நாடகம், கட்டுரை என ஏராளமானவற்றை எழுதிக் குவித்திருக்கும் கவிஞர், தமிழக இலக்கிய வரலாற்றில் ஓர் சகாப்தமாவார்.

இதைக் கொண்டாடும் பொருட்டு, அல்லது கவுரவிக்கும் பொருட்டு, அல்லது கவிஞரை உற்சாகப்படுத்தி அவரை மேன்மேலும் எழுதத் தூண்ட—நடத்தப்பட்ட விழாவே, 'கண்ணதாசன் இலக்கிய வெள்ளி விழா'வாகும்.

கவிஞர் இலக்கிய உலகில் காலடி எடுத்து வைத்த ஏப்ரல் மாதமே இந்த விழாவிற்கு உகந்த மாதமென விழாக்குழுவினர் முடிவு செய்தது சாலப் பொருத்தமானது.

ஏப்ரல் 23-ம் நாள்—

முதல் நாள் இரவில் ஒட்டப்பட்டிருந்த 'கண்ணதாசன் இலக்கிய வெள்ளி விழா'ச் சுவரொட்டிகளின் வண்ணத்தில் சென்னை நகரம் விழித்தது.

காலை பத்து மணிக்குக் கவியரங்கம்.

விழாக் கோலம் பூண்டிருந்த தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தை நோக்கி இலக்கிய ரசிகர்களின் கூட்டம் ஒன்பது மணிக்கே வரத் தொடங்கியது.

சென்னை நகரில் சாதாரணமாகவே கவியரங்கம், இசையரங்கம் என்றால் கூட்டம் கூடும். அதுவும் கவியரசர் கண்ணதாசனுக்கு நடத்தப்படும் இலக்கிய வெள்ளி விழா வென்றால் கூட்டத்திற்குக் கேட்கவா வேண்டும் !

இலக்கிய ரசிகர்களின் கூட்டமும், கண்ணதாசனை 'ஆதர்ஸ' மாகக் கொண்டாட இளங்கவிஞர்களின் கூட்டமும் திடலை நிரப்பின.

குறித்த நேரத்தில் கவியரங்கம் ஆரம்பமாயிற்று.

செவி விருந்துண்ண வந்திருந்த விருந்தினர்களை திருநாவுக்கரசு பாடி—உரை நிகழ்த்தி வரவேற்றார். நலம் பாட வந்திருந்த கவிஞர்களை அறிமுகப்படுத்தினார்.

கவிஞரின் புத்தகங்களைத் தொடர்ந்து வெளியிட்டு வரும் வானதி பதிப்பக உரிமையாளரான இவர், வரவேற்புரை நிகழ்த்தியது பொருத்தமாக அமைந்தது.

அரங்கின் தலைமைப் பொறுப்பை கவிஞர் குயிலன் ஏற்றார். திரு. குயிலன் கவிஞரின் நீண்ட நாளைய நண்பர்.

தலைமை வகித்த குயிலன் தன் தலைமைக் கவிதையினைப் பாடி முடித்ததும், "கண்ணதாசன் கவிதைகளில்..." எனும் பொதுத் தலைப்பின்கீழ் ஏழு கவிஞர்கள் திறம்பாட வந்தார்கள்.

தலைவர் ஒவ்வொருவரையாகக் கவி கூறிக் கவிபாட அழைத்தார்.

கவிஞரின் கவிதைகளிலுள்ள 'காதல்'ரசம் பற்றி காரைக்குடி ரெ. சிங்காரவடிவேலன் துடிப்புடன் சுவையாகப் பாடினார்.

'வருணனை'யை வளமாகப் பாடினர் சிதம்பரம் சுவாமிநாதன்.

காரைக்குடி மா. கண்ணப்பன் 'தாலாட்டு'ப் பாடி சபையோரை உசுப்பிவிட்டார். செட்டிநாட்டுக்காரரல்லவா! அவர் பாடிய தாலாட்டில் தாயே தூங்கும் மகத்துவம் மிகுந்திருந்தது.

மேடையில் வீற்றிருந்த கவிஞர் மெய் மறந்து தாலாட்டை ரசித்தார்.

வயிறு குலுங்கி வலிக்க தஞ்சைவாணன் 'நகைச்சுவை' பாடினர்.

'சோகம்' பாடினர் பெருமாள்; 'பக்தி' பாடினர் பசுபதி; 'தத்துவம்' பாடினர் பகவதி பாண்டியன்; தலைப்பே இல்லாது சபையேறி நின்று மழலை பாடினன் கவிஞரின் திருக்குமரன் சுப்பு கண்ணதாசன்.

தலைவர் முடிவுரை பாட, நன்றியுரை நிகழ்த்தி காலை நிகழ்ச்சியை முடித்து வைத்தார், ஆர். எஸ். பாண்டியன்.

கண்ணதாசன் கவிதைகளை ஏழு தலைப்பில் பிரித்து, தனித் தனியே திறனுய்ந்து பாடிய ஏழு கவிஞர்களின் தொனியிலும், 'எதிர் காலத்தின் மாக்கவியை கண்டு கொண்டோம்' என்ற ஆத்ம நிறைவிருந்தது.

மாலை நிகழ்ச்சி ஐந்து மணிக்கு ஆரம்பமாயிற்று.

இதுவொரு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகும்.

வரலாறு காணுத கூட்டம்.

கண்ணதாசன் வெள்ளி விழா—

'கண்ணதாசன் எந்தக் கட்சி?'...

ஸ்தாபன காங்கிரசிலிருந்து விலகி புதுக்காங்கிரசில் இணைந்திருப்பவர்; ஸ்தாபன காங்கிரசின் கொள்கைகளைக் கடுமையாக விமர்சிப்பவர்.

விழாவுக்குத் தலைமை வகிக்கப் போகிறவர், முன்னுள் முதல்வர் பக்தவத்ஸலம்.

'இவர் எந்தக் கட்சி?'...

இவரும் புதுக் காங்கிரசே.

'கண்ணதாசனை வாழ்த்தப் போகிறவர்கள் யார், யார்?'

ஸ்தாபன காங்கிரசின் பெருந்தலைவரான காமராஜ், மற்றும் அக்கட்சியைச் சேர்ந்த இதர தலைவர்களுடன் நடிகர் திலகம் சிவாஜி கணேசனும்.

எனவே, மாலை நிகழ்ச்சிக்கு ஒரு 'அரசியல் நிறம்' கிடைத்திருந்தது.

'தமிழக ஸ்தாபன காங்கிரஸ் புதுக் காங்கிரசோடு இணைவதற்கான முயற்சிகள் ஏற்கனவே பரவலாக நடைபெற்றது. அது சாத்தியமாவதற்கு இந்த விழா ஒரு முன்னோடியாக அமைந்திருக்கிறது. என்ற எண்ணத்தோடு ஸ்தாபன காங்கிரஸ்—புதுக் காங்கிரஸ் தொண்டர்கள், பொதுமக்கள் அனைவரும் திரண்டிருந்தனர்.

பெருந்திரளான மக்களையும், வாழ்த்துக்கூற வந்திருக்கும் தலைவர்களையும், வாழ்த்துப் பெற வந்திருந்த கவிஞரையும் வரவேற்று மாணவர் அப்பாசாமி பேசினார்.

பொன்னாடைகளும், வாழ்த்துப் பத்திரங்களும் மாலைகளும் தந்து மகிழ்ந்தனர் ரசிகர்கள்.

உலகக் கவிஞர்கள் சங்கத்திலிருந்து வந்திருந்த 'கண்ணதாசன் உலக மகா கவி' என்ற விருதுப் பத்திரத்தை (சீல்டு) கவிஞர் கேஸ்ரீ, கண்ணதாசனுக்குத் தந்து மகிழ்ந்தார்.

தலைவர் பக்தவத்ஸலம் தலைமையுரை நிகழ்த்தினார்.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் பேராசிரியர் டாக்டர் எஸ். கே. நாயர், 'கேரளத்தின் கண்ணதாச'னான கவிஞர் வயலார் ராமவர்மா, ரசாயன வல்லுனரும், இலக்கிய வல்லுனருமான எஸ். நல்லபெருமாள் ஆகியோர் இலக்கியத்தின் சார்பில் கவிஞரைப் பாராட்டிப் பேசினார்கள்.

ஸ்தாபன காங்கிரசைச் சார்ந்த தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் கக்கன், வடசென்னைத் தலைவர் விநாயகமூர்த்தி, தண்டாயுதபாணி ஆகியோரும்; புதுக் காங்கிரசின் சார்பில் ராதாகிருஷ்ணன் எம். பி., கே. டி. கோசல்ராம், சௌரிராஜன் ஆகியோரும் பாராட்டினார்கள்.

கவிஞரின் முதற் திரைப் பாடலுக்கு இசையமைத்த எம். எஸ். சுப்பையா நாயுடு, அந்தப் பாட்டைப் பாடி வாழ்த்தினார்.

மெல்லிசை மன்னன் எம். எஸ். விசுவநாதன், கவிஞர் சமீபத்தில் இயற்றிய, "நாளை முதல் குடிக்க மாட்டேன் சத்தியமடி தங்கம்—இன்று—ராத்திரிக்குத் தூங்கவேண்டும். வைத்திக்கிறேன்

கொஞ்சம்' என்ற பாட்டைப் பாடி, சபையோரைச் சிரிப்பிலாழ்த்தி வாழ்த்துக் கூறினார்—பொன்னாடை போர்த்தினார்.

தனது நாடகத்தை முடித்துக்கொண்டு ஒன்பதரை மணிக்கு மேடைக்கு வந்த நடிகர் திலகம், ''கவிஞா! எழுது எழுது; எழுதிக்கொண்டே இரு; உனது வளமான கருத்துக்கொண்ட கவிதைகள் எங்களுக்கு வேண்டும். நீ எங்கிருந்தாலும் வாழ்க!'' என்று வாழ்த்தினார்.

முத்திரைப் பேச்சாக பெருந்தலைவர் காமராஜர் பேசினார்.

''ஏழை மக்களுக்காகக் கவிதை எழுதுங்கள்; அவர்கள் வாழ்க்கையைச் சீர்திருத்த—வழிகாட்ட உங்கள் கவிதைகள் பயன்பட வேண்டும். அதற்காக நீங்கள் நிறைய எழுதவேண்டும்.

மேலும் மேலும் பல வெள்ளிவிழா, பொன்விழா, வைரவிழாவைக் கண்டு நீங்கள் நீண்டகாலம் வாழவேண்டும்!'' என வாழ்த்தினார்.

இறுதியில் கவிஞர் தனக்குத் தெரிவித்த பாராட்டுரைகளுக்கு நன்றி தெரிவித்து நிகழ்ச்சியை முடித்து வைத்தார்.

கட்டுக்கடங்காத கூட்டம்; அதன் உற்சாகப் பெருக்கு; தாங்கள் நினைத்தது நடக்கப் போகிறதென்ற கட்சித் தொண்டர்களின் நினைப்பு; இலக்கிய ரசிகர்களின் ரசிப்பு; அத்தனை உணர்ச்சிகளும் அங்கே காட்டாற்று வெள்ளம்போல் பெருகி ஓடியது, 'கவிஞர் கண்ணதாசனின் இலக்கிய வெள்ளிவிழா மட்டுமல்ல; இது அரசியல் வெள்ளி விழாவும் தான்' எனச் சுட்டிக்காட்டியது.




சென்னை-14, நாவல் ஆர்ட் பிரிண்டர்சில் அச்சிடப்பெற்று சேதுநிலையத்திற்காக வெளியிடுபவர் பழ. சேது ஆச்சி, 12, ராமாநுசம் தெரு, சென்னை-17. தமிழ்நாடு.

ஆசிரியர்: புலவர் நாகசண்முகம்